உ

ஸ்ரீ சங்கர பகவத்பூஜ்யபாதர்கள் அருளிய

# மனீஷா பஞ்சகம்

**ஸ்ரீ டி. கே. பத்மனாபன்**

*அவர்களால் எளிய தமிழில் விரிவான தத்வார்த்த தாத்பர்யத்துடன் எழுதப்பட்டுள்ளது.*

பப்ளிஷர்ஸ்:

**கிரி ப்ரஸ்**

**திருவல்லிக்கேணி, மதறாஸ்.**

# மனீஷா பஞ்சகம்

## முகவுரை.

ஸ்ரீ பரமேச்வரனின் பூர்ண கலையோடு கூடிய அவதாரமே, ஜகத்குருவான ஸ்ரீ ஆதிசங்கர பகவத் பூஜ்ய பாதாளுடைய அவதாரம் என்பதை ஸகல ஜனங்களும் அறிவார்கள்.

பக்ஷபாதமில்லாமலும், கல்மஷமில்லாமலும் உள்ள ஹிருதயத்தை உடையவர்களுக்குத்தான் ஆசார்யாளுடைய பெருமை தெரியும்.

ஆத்ம லாபத்திற்கு மேலான லாபம் இல்லை என்று ச்ருதி போதித்தாலும், ஸ்ரீசங்கரபகவத்பூஜ்ய பாதாளை நாம் எல்லோரும் குருவாக அடைந்த லாபமானது அதற்கு பன்மடங்கு மேலானதாக இருந்து வருகிறது என்பதில் சிறிதும் சந்தேகமே இல்லை.

பரமாச்சார்யாள் அவதரித்திராவிடில் இந்த புண்ய பூமியில் வைதிகதர்மமே தற்பொழுது இருப்பதற்கு ந்யாயமில்லை என்பதை எல்லா ஜனங்களும் அறிவார்கள்.

சுமார் 72க்கு மேலாகவுள்ள துர்மதஸ்தர்களை ஏகனாக இருந்துகொண்டு வாதத்தில் த்வம்ஸம் செய்து வைதிக தர்மத்தை தனது அல்பமான 32 வயதுக் குள்ளே புனர்ருத்தாரம் செய்த பகவத் பாதாளுக்கு மேலான தெய்வம் மூன்று லோகத்திலும் எங்கிருக்கிறது! **अहो आश्चर्यम्!**

கருணைக் கடலான பரமாச்சார்யாள் அக்ஞானிகளான ஸகல ஜீவன்களையும் ஸம்ஸார ஸாகரத்திலிருந்து கரை ஏற்றுவதற்காக, ப்ரஸ்தானத்ரயத்தி லுள்ள அத்வைத ஸித்தாந்தத்தை, மிகவும் மதுரமாகவும் ஸுலலிதமாகவுமுள்ள ஸ்தோத்ர ப்ரகரண க்ரந்தங்களை செய்து அதன் மூலமாக போதித்து கடாக்ஷித்திருக் கிறார்கள்.

அவைகளுக்குள் “மனீஷா பஞ்சகம்" என்ற ரத்னமானது ஆகாசத்தில் ஆகாசத்தில் ஸுர்யன் பிரகாசிப்பது போல் இருந்துவருகிறது. இதில் ஸகல சாஸ்த்திரங்களும் அடங்கியிருக்கிறது.

பகவான் காசி விச்வநாதமூர்த்தியே சண்டாள வேஷத்திலிருந்து கொண்டு இந்த ரத்னங்களை வெளிவரச் செய்வதற்கு காரணமாக இருந்தார் என்றால். இந்த “மனீஷா பஞ்சகத்தின்" மஹிமையை யாரால் வர்ணிக்க முடியும்.

எவ்விதம் பஞ்சாக்ஷரத்தினுடைய மஹிமையையும் பஞ்சாம்ருதத்தினுடைய மஹிமையையும் வர்ணிக்க முடியாதோ. அவ்விதமே இந்த மனீஷா பஞ்சகம்" என்ற திவ்யாம்ருதத்தின் மஹிமையையும் இவ்வளவு தான் என்று வர்ணிக்க முடியாது.

இந்த ஐந்து ஸ்லோகங்களையும் அர்த்த ஞானத்துடன் பாராயணம் செய்து வருபவர்களுக்கு மேலான ச்ரேயஸ்ஸும், தெளிவான ஞானமும் உண்டாகும் என்பதில் ஐயமில்லை. இத்துடன் த்ருடமான ஆசார்ய பக்தியும் இருந்துவிட்டால்

# மனீஷா பஞ்சகம்

"**अहं ब्रह्मास्मि**" "**அஹம் ப்ரஹ்மாஸ்மி**" என்ற திவ்யானுபவ நிலையையும் அடையலாம் என்பதில் சிறிதும் சந்தேகமேயில்லை.

ஆஸ்திக மஹா ஜனங்களுக்கு உபயோகப்படும் படியாக தற்பொழுது விரிவான தத்வார்த்தத்துடன்"மனீஷா பஞ்சகம் என்ற ரத்னங்களை புஸ்தகமாக வெளியிடுகிறோம்.

ஸ்ரீ டி.கே. பத்மநாபன் அவர்கள் ச்ருதி, சாஸ்த்திர பிரமாணங்களுடன் எளிய தமிழில் விரிவாக தாத்பர்யம் எழுதி தந்ததற்கும், இந்த "மனீஷா பஞ்சகம்" வெளிவந்த ஸந்தர்பத்தை மனதில் த்யானம் செய்து, அதற்கு பொருத்தமான ஒருபடத்தை அவர் வரையச் சொல்லி அதை தந்ததற்கும், எங்களுடைய மனமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம். இதற்கு எல்லாம் மூலகாரணம் அவருக்கு சங்கரபகவத் பூஜ்யபாதாளிடம் யிருக்கும் மேலான பக்தியே, ஆசார்யாளுடைய பரிபூர்ண கடாக்ஷம் எப்பொழுதும் அவரிடம் ஸ்திரமாகயிருக்க வேண்டும் என்று பகவத்பாதாளை ப்ரார்த்திக்கிறோம்.

---

ॐ

श्रीः

श्रीगुरुभ्यो नमः

## ॥ मनीषापञ्चकम् ॥

**सत्याचार्यस्य गमने कदाचिन्मुक्तिदायकम् ।**
**काशीक्षेत्रं प्रति सह गौर्या मार्गे तु शङ्करम् ॥१॥**

**अन्त्यवेषधरं दृष्ट्वा गच्छ गच्छेति चाब्रवीत् ।**
**शङ्करः सोऽपि चाण्डालस्तं पुनः प्राह शङ्करम् ॥२॥**

**अन्नमयादन्नमयमथवा चैतन्यमेव चैतन्यात् ।**
**यतिवर दूरीकर्तुं वाञ्छसि किं ब्रूहि गच्छ गच्छेति ॥३॥**

**प्रत्यग्वस्तुनि निस्तरङ्गसहजानन्दावबोधाम्बुधौ**
**विप्रोऽयं श्वपचोऽयमित्यपि महान्कोऽयं विभेदभ्रमः।**
**किं गङ्गाम्बुनि बिम्बितेऽम्बरमणौ चाण्डालवीथीपयः**
**पूरे वाऽन्तरमस्ति काञ्चनघटीमृत्कुम्भयोऽम्बरे ॥४ ॥**

इत्थं चण्डालवेषप्रच्छन्नस्य काशी विश्वनाथस्य वचनं श्रुत्वा चालयतीश्वरो श्रीशङ्करः पञ्चभिः श्लोकै. सर्ववेदान्तसिद्धान्तसारभूतं स्वानुभवं प्रकटयन् आह :-

**जाग्रत्स्वप्नसुषुप्तिषु स्फुटतरा या संविदुज्जृम्भते**
**या ब्रह्मादिपिपीलिकान्ततनुषु प्रोता जगत्साक्षिणी।**
**सैवाहं न च दृश्यवस्त्विति दृढप्रज्ञाऽपि यस्यास्तिचेत्**
**चाण्डालोऽस्तु स तु द्विजोऽस्तु गुरुरित्येषा मनीषा मम ॥१॥**

**ब्रह्मैवाहमिदं जगच सकलं चिन्मात्रविस्तारितं**
**सर्व चैतदविद्यया त्रिगुणयाऽशेष मया कल्पितम् ।**

इत्थं यस्य दृढा मतिः सुखतरे नित्ये परे निर्मले
चाण्डालोऽस्तु स तु द्विजोऽस्तु गुरुरित्येषा मनीषा मम ॥२॥

शश्वनश्वरमेव विश्वमखिलं निश्चित्य वाचा गुरो-
नित्यं ब्रह्म निरन्तरं विमृशतां निर्व्याजशान्तात्मनाम् ।
भूतं भावि च दुष्कृतं प्रदहतां संविन्मये पावके
प्रारब्धाय समर्पितं स्ववपुरित्येषा मनीषा मम ॥३॥

या तिर्यङ्नरदेवताभिरहमित्यन्तः स्फुटा गृह्यते
यासा हृदयाक्षदेहविषया भान्ति खतोऽचेतनाः।
तां भास्यैः पिहितार्कमण्डलनिभा स्फूर्तिं सदाभावय
न्योगी निर्वतमानसः स गुरुरित्येषा मनीषा मम ॥४॥

यत्सौख्यांवुधिलेशलेशत इमे शकादयो निर्वता
यच्चिते नितरां प्रशान्तकलने लब्ध्वा मुनिर्निर्वृतः ।
यस्मिन्नित्यसुखाम्बुधौ गलितधीब्रह्मैव न ब्रह्मवि-
द्यः कश्चित्स सुरेन्द्रवन्दितपदो नूनं मनीषा मम ॥५ ॥

इति श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यस्य श्रीगोविन्दभगव-
त्पूज्यपादशिष्यस्य श्रीमच्छंकरभगवतः कृतौ

**श्रीमनीषापश्चक संपूर्णम्**

# மனீஷா பஞ்சகம்

|| श्रीः ||
श्री गुरुभ्यो नमः

## பூர்வபீடிகை.

**लोकेऽस्मिन् द्विविधा निष्ठा पुरा प्रोक्ता मयानघ ।**
**ज्ञानयोगेन सांख्यानां कर्मयोगेन योगिनाम् ॥**

**லோகேஸ்மிந் தவிவிதா நிஷ்டா**
**புரா ப்ரோக்தா மயாநக ।**
**ஞானயோகேந ஸாங்க்யாநாம்**
**கர்மயோகேந யோகிநாம் ॥**

என்ற கீதா வசனத்தை அனுஸரித்து கர்ம யோகம், ஞான யோகம் என்ற இரண்டு மார்க்கங்கள் தான் மேலான ச்ரேயஸ்ஸை அடைவதற்கு மிகவும் ஸாதன மாக விளங்கிவருகின்றது.

கர்ம யோகத்தை ப்ரவ்ருத்தி லக்ஷணமான தர்மம் என்றும் ஞானயோகத்தை நிவ்ருத்தி லக்ஷணமான தர்மமென்றும் அறியவேண்டும்.

ஸர்வ ஜகத்தினுடைய ஸ்திதிக்கு இந்த இரண்டு விதமான தர்மங்கள் தான் காரணமாக விளங்கி வருகின்றது என்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

ஆனால் இந்த புண்ய பூமியில் சுமார் 1500 வருஷங்களுக்கு முன்பு பௌத்தம், பாசுபதம். ஸாங்க்யம். காபாலிகம், இம்மாதிரி 72 மதங்களினால் ப்ராணிகள் ஆக்ரமிக்கப்பட்டு, உண்மையான தத்வம் என்னவென்று தெரியாமல், வேதங்கள், ஸ்மிருதிகள், இதிஹாஸ புராணங்கள். இவைகளில் நம்பிக்கை இல்லாதவர்களாக மாறி கேவலம் நாஸ்திகர்களாக தங்களுடைய ஜன்மாவை கழித்து வந்தார்கள்.

இந்த கடோரமான ஒரு ஸ்திதியானது இந்த புண்ய பூமியில் ஏற்பட்ட ஸந்தர்ப்பத்தை அறிந்து கர்ம யோகம், ஞான யோகம் என்ற இரண்டு தர்மங்களை ஸ்தாபித்த ஸாக்ஷாத் மூலப்ரபுவான மஹா கைலாஸத்திற்கு அதிபதியான பரமேச்வரன், அப்ராக்ருதமான மங்கள விக்கிரஹத்தை ஸ்வீகரித்துக் கொண்டு, இந்த பாரத வர்ஷத்தில், கேரள தேசத்தில். பூர்ணா நதிக்கரையில் வ்ருஷாத்ரி என்ற க்ஷேத்திரத்தில் ஸ்ரீ சங்கரபகவத் பூஜ்ய பாதாளுடைய ரூபமாக அவதரித்த ரஹஸ்யத்தை ஸகல ப்ராணிகளும் அறிந்தவர்களே.

இத்தகைய மஹிமையுள்ள பகவத்பாதாள் தனிமையாக இருந்துகொண்டு வேத பாஹ்யர்களான 72 மதஸ்தர்களையும் வாதத்தில் த்வம்ஸம் செய்து உண்மையான அத்வைத தத்வத்தை லோகத்தில் சாச்வதமாக நிலைத்திருக்கும்படி செய்தார்கள்.

இந்த ப்ரபுவைத்தான் ஞானதாதுவான ஸத்குரு என்று சொல்ல வேண்டும்.

# மனீஷா பஞ்சகம்

பகவத்பாதாள் அவதாரம் செய்வதற்கு முன்பு "ப்ரும்ம ஸூத்திரம்" என்ற க்ரந்தத்திற்கு அர்த்தம் யாருக்குமே தெரியாது.

பரமாசார்யாள் பாஷ்யம் செய்த பிறகு தான் அதன் உண்மையான பொருளை தெரிந்து கொண்டார்கள். இதுபோல் கீதா பாஷ்யம், தச உபநிஷத் பாஷ்யம், ஸகஸ்ரநாம பாஷ்யம், த்ரிசதி பாஷ்யம், அனேகவிதமான ப்ரகரண க்ரந்தங்கள், ஸ்தோத்திர க்ரந்தங்கள் முதலியவைகளைச் செய்து ஸம்ஸார ஸாகரத்தை ஸுலபமாக கடந்து செல்ல அருள் புரிந்திருக்கிறார்கள்.

அப்பேர்ப்பட்ட கருணா மூர்த்தியான பகவத்பாதாளுக்கு ஸமமானவர்கள் மூன்று லோகங்களிலும், யாருமே கிடையாது.

(கலௌ ஸ்ரீசங்கர:) என்று, கலியில் சங்கரபகவத் பாதாளுக்கு மேலான தெய்வமே இல்லை.

இவ்வித மஹிமையுள்ள பகவத்பூஜ்ய பாதாள் மஹா புனிதமான காசீ க்ஷேத்திரத்தில் வாஸம் செய்து கொண்டு தமது சிஷ்ய கோடிகளுக்கு உபநிஷத்தில் ப்ரதி பாத்யமான ஆத்ம ஸ்வரூப தத்வ ஞானத்தை உபதேசம் செய்து வந்தார்கள்.

இவ்விதம் இருக்கும்பொழுது ஒரு நாள் காலையில் ஜகத் குருவான பகவத்பாதாள் கங்கையில் 'ஸ்நானம் செய்துவிட்டு திரும்பிவரும் வழியில் ஒரு சண்டாளன் தன் தலைமேல் துர்நாற்றத்தோடு கூடிய ஒரு கள் குடத்தையும், ஒரு கையில் நெருப்பையும், மற்றொரு கையில் ஒரு தண்டத்தையும் வைத்துக்கொண்டு, தன் மனைவி, இரண்டு குமாரர்கள், நான்கு சொரிபிடித்த நாய்கள். இவைகளுடன் ஆசார்யாளுடைய ஸமீபத்தில் வந்துகொண்டிருந்தான்.

ஸமீபத்தில் வருகிற சண்டாளனைப் பார்த்து பகவத்பாதாள் "தூர விலகிப்போ" என்று கூறினார். அப்பொழுது புண்ய மூர்த்தியான பகவத்பாதாளுக்கு வயது பன்னிரண்டுதான் இருக்கும். இந்த வார்த்தைகளைக் கேட்ட சண்டாளன் ஒரு ஆத்ம ஞானியைப்போல் ஆசார்யாளிடம் பேச ஆரம்பித்தான். அதாவது

**अन्नमयादन्नमयमथवा चैतन्यमेव चैतन्यात् ।**
**यतिवर दूरीकर्तुं वाञ्छसि किं, ब्रेहि गच्छ गच्छेति ॥**

**அன்னமயாதன்மைய மதவா**
**சைதன்யமேவ சைதன்யாத்**
**யதிவர தூரீகர்த்தும் வாஞ்சஸி கிம்**
**ப்ரூஹி கச்ச கச்சேதி**

ஹே யதீச்வரா! உங்களுடைய அன்னமயமான தேகத்தினின்றும், எனது அன்னமயமான தேகத்தினை தூரமாக போகும்படி சொல்லுகின்றீரா?

அல்லது பஞ்சகோச விலக்ஷணமாகிய ஆத்மாவினின்றும், மற்றொரு ஆத்மாவை போகும்படி கூறுகின்றீரா?

# மனீஷா பஞ்சகம்

அன்னமய கோசமான தேகம் ஜடமானதினால் அது ஒரு இடத்தைவிட்டு மற்றொரு இடத்திற்கு போகாது.

பஞ்சகோச விலக்ஷணமான ஆத்மாவோ வெனில், எங்கும், எப்பொழுதும். பரிபூர்ணமாய் நிறைந்து இருக்கிறது. அதில் விலகச் செய்கிறவன் யார்? விலகுகின்றவன் யார்?

மேலும்

**प्रत्यग्वस्तुनि निस्तरङ्गसहजानन्दावबोधाम्बुधौ ।**
**विप्रोऽयं श्वपचोऽयमित्यपि महान्कोऽयं विभेदभ्रमः ।**
**किं गङ्गाम्बुनि बिम्बितेऽम्बरमणौ चाण्डालवीथी पयः**
**पूरे वाऽन्तरमस्ति काञ्चनघटीमृत्कुम्भयोर्वाऽम्बरे ॥**

**ப்ரத்யக்வஸ்த்துநி நிஸ்த்தரங்க**
**ஸஹஜானந்தாவபோதாம்புதௌ**
**விப்ரோயம் ஶ்வப்சோயமித்யபி**
**பஹான் கோயம் விபேதப்ரம:**
**கிம் கங்காம்புநி பிம்பிதேம்பரமணௌ**
**சாண்டாளவீதீபய:**
**பூரே வாந்தரமஸ்தி காஞ்சனகடீம்ருத்**
**கும்பயோர்வாம்பரே**

ஹே க்ருபாநிதே! அனுருதம்.. ஜடம், துக்கம், அஹங்காரம், இவைகளுக்கு எல்லாம், விலக்ஷணமாக பாஸித்துக்கொண்டு வருகின்ற ஸத்ரூபமான பரப்ரும் மத்தினிடத்தில், எவ்விதம் எல்லாம் ஸமுத்திரமாக இருக்கும் பொழுது நீர்க்குமிழிகள், ஸமுத்திரம் என்ற பேதபுத்தி ஏற்படுகிறதோ, அவ்விதம் இவன் ப்ராமணன், இவன் சண்டாளன் என்று, தெளிந்த ஞானத்தையுடைய மஹானான தங்களுக்கு எங்கிருந்து இந்த ப்ரமையானது உண்டானது?

தவிர, ஸச்சிதாநந்தமாக ப்ரும்மம் இருந்த போதிலும், சண்டாளனுடைய தேகத்தின் சம்பந்தம் ஏற்பட்டு விட்டதால் சுத்தமாக ஆகாது என்று என்னிடம் கேட்கலாம், அது மிகவும் தவறான எண்ணம் ஏனென்றால் கங்கையில் ப்ரதிபிம்பிக்கின்ற ஸுர்யனுக்கும், சண்டாளன் வீட்டு சாக்கடையில் ப்ரதிபிம்பிக்கின்ற ஸுர்யனுக்கும் ஏதேனும் பேதம் இருக்கின்றதா?

ஆனால் இது ஆகாசத்திலுள்ள ஸுர்யன், இது ஜலத்திலுள்ள ஸுர்யன் என்ற பேதம் இருக்கின்றதே என்று கேட்கலாம். ஆனால் உண்மையாக இந்த பேதம் உபாதியினால் ஏற்பட்டதல்லவா. ஆகையினால் வஸ்துதஹா பேதம் எங்கிருக்கிறது.

அதுவுமின்றி தங்கக்குடத்திற்குள்ளிருக்கும் ஆகாசத்திற்கும், மண்குடத்திற்குள்ளிருக்கும் ஆகாசத்திற்கும் என்ன பேதம் இருக்கிறது.

இதிலிருந்து எங்கும் பரிபூர்ணமாக இருக்கின்ற ஆகாசம், 'மண்குடம், தங்கக்குடம் என்பதினால் அல்லவா பேதமாக தெரிகிறது.

பாரமார்த்திக தசையில் பேதம் எங்கிருக்கிறது?

அதுபோலவே ஆத்ம ஸ்வரூபம் த்ரிகால பரிச்சேதமில்லாமல் இருக்கும்பொழுது தேஹ பரிச்சேதத்தினால் அல்லவா வித்தியாஸமாக தெரிகிறது.

**तदुक्तम,**

**"चण्डालदेहे पश्वादिशरीरे ब्रह्मविग्रहे ।**
**अन्येषु तारतम्येन स्थितेषु पुरुषोत्तमः ।।**
**व्योमवत्सर्वदा व्याप्तः सर्वसंबन्ध वर्जितः ।**
**एकरूपो महादेवः स्थितः सोऽहं परामृतः**

**ததுக்தம்**

**சண்டாளதேஹே பச்வாதிசரீரே**
**ப்ரஹ்மவிக்ரஹே**
**அந்யேஷு தாரதம்யேந ஸ்திதேஷு**
**புருஷோத்தம:**
**வ்யோமவத்ஸர்வதா வ்யாப்த:**
**ஸர்வஸம்பந்த வர்ஜித:**
**ஏகரூபோ மஹாதேவ: ஸ்தித:ஸோஹம்**
**பராம்ருத:"**

என்று சாஸ்திரங்களில் சொல்லவில்லையா நாம் இருவரும் தத்வத்ருஷ்டியாக ஒன்றாக இருக்கும் பொழுது என்னை "தூரவிலகிப்போ" எனேஉ கூறுகின்றீர்களே. அது மிகவும் சரியல்ல. ஹே ப்ரபோ| இருந்தாலும் நான் விலகிப்போவதைப்பற்றி சிறிதும் வருந்தவில்லை. ஆனால் அதற்கு முன்பாக தங்களைப் போன்ற ஞானிகளிடமிருந்து தத்வத்தை தெரிந்து கொண்டு, என்போன்றவர்களும்கூட விலகித்தான் போக வேண்டும் என்று சாஸ்த்திரங்கள் இருந்தால் நான் மிகவும் சந்தோஷமாக போகின்றேன் என்று சண்டாளன் பாஷ்யகாராளிடம் கூறினான்.

**तत्वमसि** தத்வமஸி என்ற மஹா வாக்யத்தின் அர்த்தத்தைப் போதிக்கின்ற சண்டாளனுடைய வார்த்தைகள். வேதாந்த ஸமுத்திரத்தை யுக்தி என்ற மத்துனால் கடைந்து கடைந்து எடுத்து அதில் உண்டான அம்ருதம் போலுள்ள பகவத்பாதாளுடைய அறிவாகிற பொக்கிஷத்திலிருந்து "மனீஷா பஞ்சகம்" என்ற ஐந்து ரத்னங்களை வெளிவரச் செய்தது.

இந்த ஐந்து ஸ்லோகங்களினால், "ப்ரும்மஸூத்திர" ப்ரதி பாத்ய நிர்குண ப்ரும்மத்தைக் காட்டிலும் வேறான வஸ்து ஒன்றுமேயில்லை என்று பாஷ்ய காராள் நிரூபணம் செய்கின்றார்கள்.

பகவத்பாதாளுடைய ப்ரவசனம் என்ற ஸூக்தி எவ்விதமான ம்ஹிமையோடு கூடியது என்பதை யாராலும் வர்ணிக்கமுடியாது,

அதாவது

**वेदास्सर्वे तथादेवाः ब्रह्मलोकेमुदान्विता।**
**प्रत्यहं शांकरी सूक्तिं पूजयिष्यन्ति सादरम्॥**

**"வேதாஷ்லர்வே ததாதேவா:**
**ப்ரஹ்மலோகே முதான் விதா: ।**
**ப்ரத்யஹம் சாங்கரீம் ஸூக்திம்**
**பூஜயிஷ்யந்தி வாதரம்"**

என்ற வசனத்தை அனுஸரித்து பூலோகத்தில் பகவத் பாதாளாக அவதரித்த பாஷ்யகாராளுடைய ஸூக்தியை வேதங்களும், தேவாளும், தினந்தோறும் பரம ஆதரவோடு பூஜிக்கிறார்கள் என்று தெரிகிறபடியால் ஆசார்யாளுடைய பாஷ்யம் பூஜிக்கத் தகுந்தது என்பதை வர்ணிக்கவும் வேண்டுமா?

வேதங்களுடைய ஹார்த்ரமான அபிப்பாயத்தை அனுஸரித்துத்தான் பகவத் பாதாள் பாஷ்யம் செய்திருக்கிறார்கள் என்பதை யாராலும் மறுக்க முடியாது,

பரிசுத்தமான அந்தக்கரணத்துடன் கூடிய ப்ராணிகளுக்குத்தான் பாஷ்யகாராளுடைய பெருமை தெரியவரும். நாம் எல்லோரும் பரிசுத்தமான அந்தக்கரணத்தை அடைந்தாலொழிய, மேல் வரும் ச்லோகங்களின் ருஜுவான் தாத்பர்யத்தை அறிய முடியாது.

ஆகையினால் நாம் எல்லோரும் பகவத்பாதாளுடைய திவ்ய ஸூக்தியை. நமது அந்தக்கரணம் பரிசுத்தமாவதற்கு அனுஸந்தானம் செய்துகொள்வோம்.

# மனீஷா பஞ்சகம்.

## ॥ मनीषापञ्चकम् ॥

जाग्रत्स्वप्नसुषुप्तिषु स्फुटतरा या संविदुज्जम्भते
या ब्रह्मादिपिपीलिकान्ततनुषु प्रोता जगत्साक्षिणी ।
सैवाहं न च दृश्यवस्त्विति दृढप्रज्ञाऽपि यस्यास्ति
चेच्चाण्डालोऽस्तु स तु द्विजोऽस्तु गुरुरित्येषा मनीषा मम ॥ ॥१॥

**ஜாக்ரத்ஸ்வப்ன ஸுஷுப்திஷு**
**ஸ்புடதரா யா ஸம்விதுஜ்ஜ்ரும்பதே**
**யா ப்ரம்மாதி பிபீலிகாந்ததநுஷு**
**ப்ரோதா ஜகத்ஸாக்ஷிணீ**
**ஸைவாஹம் ந ச த்ருச்யவஸ்த்விதி**
**த்ருடப்ரக்ஞாபி யஸ்யாஸ்தி**
**சேச்சாண்டாலோஸ்து ஸ து**
**த்விஜோஸ்து குருரித்யேஷா மனீஷா மம** ॥ 1 ॥

**யா ஸம்வித்** = எந்த அறிவானது, **ஜாக்ரத்ஸ்வப்னஸுஷுப்திஷு** = ஜாக்ரம், ஸ்வப்னம். ஸுஷுப்திகாலம் இவைகளில், **ஸ்புடதரா** = மிகவும் தெளிவாக, **உஜ்ஜ்ரும்பதே** = விளங்குகின்றதோ, **யா** = எந்த அறிவானது, **ப்ரஹ்மாதிப் பீலிகாந்த தனுஷு** = ஹிரண்ய கர்பனிலிருந்து சிற்றெரும்பு வரையிலுள்ள சரீரங்களில், **ப்ரோதா** = கலந்ததாய் (ஊடுருவிச் சென்றதாய்), **ஜகத்ஸாக்ஷிணீ** = உலகத்தினரின் செய்கைகளுக்கு ஸாக்ஷியாக இருக்கின்றதோ, **ஸைவாஹம்** = அது நான்தான், **ந ச த்ருச்யவஸ்து** = இந்திரியங்களுக்கு புலப்படும் பொருளாக இல்லை, **இதி** = என்ற, **த்ருடப்ரக்ஞா** = உறுதியான அறிவு, **யஸ்ய** = எவனுக்காவது, **அஸ்தி சேத்** = இருக்குமேயானால், **ஸ: து** = அவன், **சண்டாள: அஸ்து** = சண்டாளனாக இருக்கட்டும், **த்விஜ: அஸ்து** = ப்ராமணனாக இருக்கட்டும், **ஸ:** = அவன், **குரு:** = ஆசாரியன், **இதி** = என்ற, **ஏஷா** = இந்த, **மனீஷா** = எண்ணம், **மம** = என்க்கு, **அஸ்தி** = இருக்கிறது.

**தாத்பர்யம்** :

देहिनोऽस्मिन्यथा देहे कौमारं यौवनं जरा ।
तथा देहान्तरप्राप्तिः धीरस्तत्र न मुह्यति ॥

**“தேஹி நோஸ்மின் யதா தேஹே கௌமாரம் யௌவநம் ஜரா ।**
**ததா தேஹாந்தரப்ராப்தி: தீரஸ்தத்ர ந முஹ்யதி ॥”**

என்ற கீதாசாஸ்திரத்தை அனுசரித்து. அதாவது, ஒருவனுக்கு தன்னுடைய் தேகத்தில் குமாராவஸ்தை, யௌவனாவஸ்தை. ஜராவஸ்தை, என்ற பரஸ்பர விலக்ஷணமான அவள் தைகள் ஏற்படுகின்றன.

அந்த மூன்று அவஸ்தைகளுக்குள் ஒரு அவஸ்தை போகும் சமயத்தில் ஆத்மா அழிந்துவிட்டது என்றோ, மற்றொரு அவஸ்தை புதிதாக வருங்காலத்தில் ஆத்மா புதிதாக பிறந்தது என்றோ என்பது இல்லை.

ஒரு அவஸ்தை போய், மற்றொரு அவஸ்தை வரும் சமயத்திலும் ஆத்ம ஸ்வரூபமானது கேவலம் ஸாக்ஷியாகவும் நித்யமாகவும்தான் இருந்து வருகிறது.

இதிலிருந்து கௌமாரம் என்ற முதலான அவஸ்தைகள் ஸ்தூல தேகத்தினுடைய தர்மம்தான் என்று பிரஸித்தமாக விளங்கிவந்தபோதிலும், தேகம் வேறு ஆத்மா வேறு என்ற விவேக ஞானம் இல்லாத காரணத்தினால், அஞ்ஞானிகள் தேகமே ஆத்மா என்றும். ஆத்மாவே தேகமென்றும் அனுபவித்துக் கொண்டு பஞ்ச பூதங்களினால் செய்யப்பட்டதும், நச்வரமானதுமான தேகத்தி னுடைய் தர்மமாகிய அவஸ்தைகளை ஆத்மாவிடத்தில் ஆரோபணம் செய்து கொண்டு, அவன் பிறந்தான் என்றும், இவன் இறந்தான் என்றும் வியவஹாரம் செய்கின்றார்கள்.

மேலும் கௌமார அவஸ்தை போய். யௌவனா வஸ்தை வந்தபோதிலும்கூட கௌமாராவஸ்தையில் குமாரனாக இருந்த நாம்தான் இப்பொழுது யுவனாக இருந்து வருகிறோம் என்ற ப்ரத்யக்ஷமான அறிவினால், அவஸ்தா நாசத்திலும்கூட ஆத்மாவிற்கு நாசமில்லை என்றும், அவஸ்தையின் உற்பத்தியில் ஆத்மாவிற்கு உற்பத்தி இல்லையென்றும் தெரியவருகிறது.

தவிரவும், ஒரு அவஸ்தையில் தான் என்ன செய்தோம் என்பதை மற்றொரு அவஸ்தையில் ஸ்மரித்துக் கொள்கிறான் என்பது லோக பிரஸித்தமானது.

இதிலிருந்தே அவஸ்தைகளினுடைய மாறுதலால் ஆத்மாவிற்கு மாறுதலே இல்லை என்றும், கேவலம் பல வேறு அவஸ்தைகளுக்கு கூடஸ்தசைதன்யமான ஆத்மா வெறும் ஸாக்ஷியாகத்தான் இருந்து வருகிறது என்றும் ஸித்திக்கிறது. இந்த ரஹஸ்யத்தைத்தான்.

**"स्फुटतरा या संविदुज्जम्भते" "प्रोता जगत्साक्षिणो।"**

**"ஸ்புடதரா யா ஸம்விதுஜ்ரும்பதே" "ப்ரோதா ஜகத் ஸாக்ஷிணீ"**

என்ற வாக்கியங்களினால் பகவத்பாதாள் ஸூசனம் செய்து காட்டுகின்றார்கள்.

அதாவது ஸகல பிராணிகளும் ஜாக்ரம். ஸ்வப்பனம், ஸுஷுப்தி என்ற பரஸ்பர விலக்ஷணத்தோடு கூடிய அவஸ்தைகளை அனுபவித்துக் கொண்டிருக்கிறார்கள்.

நிற்க, சக்ஷுஸ் இந்திரியத்தினால் சூரிய வெளிச்ச மூலமாக ஸ்தூல விஷயங்களை கிரஹித்து அனுபவித்துக் கொண்டிருக்கிற அவஸ்தைக்குத்தான் ஜாக்ராவஸ்தை என்று பெயர்.

**"इन्द्रियाणामुपरमे मनोऽनुपरत यदि ।**
**सेवते विषयानेव तद्विद्यात्स्वप्नदर्शनम् ॥**

**"இந்திரியாணாமுபரமே மனோ அனுபரதம் யதி ।**
**ஸேவதே விஷயானேவ தத்வித்யாத்ஸ்வப்ன தர்சனம் ॥"**

என்ற சாஸ்திரத்தை அனுஸரித்து, எப்பொழுது இந்த்ரியங்கள் ஒரு வேலையும் செய்யாமல் மனதில் லயத்தை அடைந்து, அந்த மனதும் கூட பாஹ்ய பதார்த்தங்களை கிரஹிக்காமல், கேவலம் ஜாக்ராவஸ்தையில் பார்க்கப்பட்ட பதார்த்தங்களினுடைய வாசனையை மட்டும் வைத்துக் கொண்டு மனதானது வேலை செய்து கொண்டிருக்கின்றதோ, அப்பொழுது அந்த அவஸ்தைக்கு ஸ்வப்னா வஸ்தை என்று பெயர்.

அதே மாதிரி , பூர்வத்தில் பார்க்கப்பட்ட பதார்த்தங்களுடைய வாசனையை மட்டும் வைத்துக்கொண்டு எந்த ஒரு மனதானது வேலை செய்து கொண்டிருக் கின்றதோ. அந்த மனதும் கூட லயத்தை அடைந்து விட்டால் அப்பொழுது அந்த அவஸ்தையை ஸுஷுப்தி அவள் தை என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன.

மேல் கூறிய மூன்று அவஸ்தைகளிலும் கேவலம் ஸாக்ஷியாக மட்டும் இருந்து கொண்டு எந்த சைதன்யாக ரஸமான அறிவானது அதிநிர்மலமாக பிரகாசித்துக் கொண்டு வருகிறதோ, அந்த அறிவைத்தான் வேதத்தில் பரப்ரும்மத்தினுடைய ஸ்வரூப லக்ஷணமாக சொல்லப்பட்டிருக்கிறது.

மேலும் "யாதொரு நான் இவ்வளவு காலமாக தூங்கிக்கொண்டிருந்தேனோ அந்த நான் இப்பொழுது முழித்துக்கொண்டிருக்கிறேன்" என்ற ஒரு அனுபவமானது பிரத்யக்ஷ ஞானத்துடன் ஸகல பிராணிகளுக்கும் இருந்துவருகிறது என்பது. லோக ப்ரஸித்த மல்லவா!

இதிலிருந்து தூங்கினவனும், முழித்துக்கொண்டவனும் ஒருவனேதான் என்பது வெளியாகிறது. தவிர, அனுபவமில்லாமல் ஸ்மரிப்பது என்பது ஏற்பட முடி யாது என்பதினாலேயும் ஒருவன் அனுபவித்த விஷயத்தை மற்றொருவன் ஸ்மரிக்கமுடியாது என்பதினாலேயும், அனுபவித்தவன் ஒருவனாகவும் ஸ்மரிக்கின்றவன் மற்றொருவனாகவும் இருப்பதற்கு கொஞ்சமும் ப்ரஸக்தி இல்லாததினால், "அனுபவித்தவனேதான் பின் காலத்தில் ஸ்மரிக்கின்றவனாக வுமாநிறான்" என்ற ஸித்தாந்தமானது வெளியாகிறது.

இதனால் ஸுஷுப்தி அவஸ்தையில் இருந்த ஒரு அறிவாகிறப்ரும்மந்தான் ஜாக்ராவஸ்தையிலும் இருந்து வருகிறது என்று தெரிகிறபடியால், ஜாக்ர, ஸ்வப்ன,

ஸுஷுப்தி என்ற அவஸ்தைகளினுடைய நாசத்திலும் கூட அறிவாகிற ப்ரும்மம் கேவலம் ஸாக்ஷியாக பாஸித்து வருகிறது.

மேலும் எந்த ஒரு அறிவானது ப்ரும்மாதி பிபீலி காந்தகமாகவுள்ள ஸகல பிராணிகளுடைய சரீரங்களில் கலந்துகொண்டு ஊடுருவிச் சென்றதாயும், ஸகல பிராணிகளுடைய புண்ய பாப கர்மாக்களுக்கு ஸாக்ஷியாக மட்டும் இருந்து கொண்டு விளங்கி வருகின்றதோ, அப்பேர்ப்பட்ட மஹிமையோடு கூடிய விஞ்ஞான மயமான பரமாத்மாவைத்தான், 'ஸத்யம், ஞானம், அனந்தம், ப்ரும்மா" என்று ச்ருதியானது போதிக்கிறது.

இவ்விதம், ஜாக்ர ஸ்வப்ன ஸுஷுப்தி என்ற அவஸ்தைகளிலும் நாசத்தையடையாமல் தொடர்ந்து கொண்டு ஞான ஸ்வரூபியான பரமாத்மா வானவர் பாஸித்து வருகிறார்.

அந்த பரமாத்மாவைத்தான் ஸகல பிராணிகளும் “நான்” என்ற சப்தத்தினால் வியவஹாரம் செய்து வருகின்றார்கள்.

ச்ருதியும்,

“அயமாத்மா பரும்மா", “தத்வமஸி” என்ற மஹா வாக்கியங்களினால் ஆத்மாவையே ப்ரும்மம் என்று போதிக்கிறது.

இப்படி ப்ரும்மமாக ஆத்ம ஸ்வரூபமானது பாஸித்து வரும்பொழுது . ப்ருதக், ப்ருதக்காகவும் த்ரிகால பரிச்சேதமாகவும். "நேதி, நேதி” என்ற உபநிஷத் வாக்கியத்தினால் தள்ளப்பட்டதாயும் அறிவிற்கு விஷயமாகின்றதாயும் உள்ள த்வைத ப்ரபஞ்சமானது ஒரு காலத்திலும் ஆத்மாவாக ஆக முடியாது.

ஏனென்றால் அதாவது,

**"इदं जगत् मिथ्या दृश्यत्वात्, जडत्वात्,**
**परिच्चिन्नत्वात, शुक्तिरौप्यवत्"**

**“இதம் ஜகத் மித்யா த்ருச்யத்வாத், ஜடத்வாத்,**
**பரிச்சின்னத்வாத், சுக்திரௌப்யவத்'**

என்ற அனுமான சாஸ்திரத்தை அனுஸரித்து வேதாந்திகள் "ப்ரும்மம் ஒன்றுதான் ஸத்யம், த்ருச்ய ஜகத் முழுவதும் மித்யை” என்று பரம ஸித்தாந்தமாகச் சொல்லுகிறார்கள்.

அதுவுமல்ல, அனுபவத்தில் பார்க்கும் பொழுதும் ஜகத்தை பொய்யென்றுதான் தீர்மானிக்க வேண்டும்.

அதாவது. ஸ்வப்னத்தில் காணப்படும் பதார்த்தங்களெல்லாம், ஜாக்ராவஸ்தையில் காணப்படாததனால் அல்லவா ஸ்வப்ன ப்ரபஞ்சத்தை பொய் என்று தீர்மானிக்கின்றோம்.

அதே மாதிரி தான் ஜாக்ரப்ரபஞ்சத்தில் காணப்படும் பதார்த்தங்களெல்லாம் ஸ்வப்ன ப்ரபஞ்சத்தில் காணப்படாதவைகளாக ஆகின்றது. உதாரணமாக, ஜாக்ரத்தில் உயிரோடிருக்கும் ஜனங்களை. ஸ்வப்னத்தில் மரித்தவர்களாயும். அப்படியே ஜாக்ரத்தில் மரித்தவர்களை ஸ்வப்னத்தில் உயிரோடிருக்கின்றவர் களாயும் காண்கிறோம்.

இதிலிருந்தே ஸ்வப்ன பிரபஞ்சம் எவ்விதம் பொய்யோ அவ்விதமே ஜாக்ர பிரபஞ்சமும் பொய் என்று ஸித்திக்கிறது.

தவிர;

**"जाग्रप्रपञ्चः मिथ्या अवस्थान्तरे**
**अदृष्टत्वात् स्वप्नप्रपञ्चवत्**

**"ஜாக்ரப்ரபஞ்ச : மித்யா அவஸ்தாந்தரே**
**அத்ருஷ்டத்வாத் ஸ்வப்ன ப்ரபஞ்சவத்'**

என்ற அனுபவத்தையொத்து ஜாகரபரபஞ்சம் பொய் என்று தெரிகிறது.

மேலும் அறிகிறவன் அறியப்பட்டவனாக ஒரு காலத்திலும் ஆகவே மாட்டான் என்பது ப்ரஸித்தமானது.

ஆதலால் அறிவிற்கு விஷயமாகின்ற ஸர்வ த்ருச்ய் வஸ்துக்களும் அறிவாகவே ஆகமுடியாது.

அறிவானது மூன்று காலங்களிலும் ஸாக்ஷியாகவே தான் இருந்து வருகிறது.

த்ருச்ய வஸ்துவாக காணப்படுகின்ற ஸகலமும் ஆத்ம ஸ்வரூபமாக ஆக முடியாது என்பதைக் காட்டுவதற்காகவே ஸ்லோகத்தில் பூஜ்ய பாதர்களினால்,

"**न च दृश्यवस्तु**" "ந ச த்ருச்ய வஸ்த்து"

என்ற பதமானது ஸ்பஷ்டமாக பிரயோகம் செய்யப்பட்டிருக்கிறது.

ஜாக்ர ஸ்வப்ன ஸுஷுப்தி என்ற மூன்று அவஸ்தைகளிலும், ப்ரும்மாதிபிபீலி காந்தமாகவுள்ள ஸகல சரீரங்களில் கலந்ததாக இருந்துகொண்டு கேவலம் ஸாக்ஷியாகவும், ஸர்வஜகத் பாஸிப்பதற்கு காரண. பூதமாயும் எந்த அறிவானது மிகவும் நிர்மலமாக பாஸித்து வருகிறதோ, அந்த அறிவேதான் 'நான் என்றும்,

**"वृक्षे वृक्षे च पश्यामि जटामण्डलधारिणम्"**

**"வ்ருக்ஷே வ்ருக்ஷே ச பச்யாமி ஜடாமண்டலதாரிணம்"**

என்ற மாதிரியுள்ள த்ருடமான ப்ரக்ஞையும் எவனுக்காவது இருக்குமேயானால் அவன் அநேக கோடி ஜன்மாக்களில் பக்தியோடும் சிரத்தையோடும் தன் வர்ணத்திற்கும் ஆசிரமத்திற்கும் உசிதமான , ச்ருதி ஸ்மிருதிகளில் சொல்லப்பட்ட தர்மங்களை. தான் செய்கிறோம். என்ற கர்த்ருத்வ அபிமானத்தையும் விட்டு, அந்த கர்மாக்களுடைய பலன்களில் ஆசையில்லாமல் ஈச்வர ஆராதன ரூபமாக கர்மாவை செய்த மஹா புண்யவானாகவே இருக்கவேண்டும்.

இவ்வித உறுதியான ஞானமானது எவனுக்கு சஞ்சலமில்லாமல் இருந்து வருகின்றதோ. அவன் சண்டாளனாகத்தான் இருக்கட்டும் அல்லது பிராமணனாகத்தான் இருக்கட்டும், என்னுடைய விஷயத்தில் "தத்வமஸி" என்ற மஹா வாக்கியத்தை உபதேசிக்க அர்ஹதியாக உள்ள ஆசாரிய புருஷன் தான் என்ற எண்ணம் என்னுடைய மனதில் உறுதியாக இருந்து வருகிறது என்று பகவத்பாதாள் தன்னுடைய ஸ்வானுபூதியை பிரகடனம் செய்தார்கள்.

**"वर्णानां ब्राह्मणो गुरुः"**

**"வர்ணானாம் ப்ராம்மணோ குரு:"**

என்று சாஸ்திரத்தில் சொல்லியிருப்பதால் எப்படி சண்டாளனுக்கு "குருத்வம்" ஸித்திக்கும்? சண்டாளன் குருவினுடைய ஸ்தானத்திற்கு அர்ஹதியுள்ளவன் தான் என்று சொன்ன பாஷ்யக்காராளுடைய அபிப்ராயத்தை அடியிற்கண்டபடி அறியவும்;

அதாவது, ஸகலமும் ப்ரும்மமயமாக் இருந்து கொண்டிருக்கும்பொழுது, சண்டாளன் பிராமணன் என்ற பேத ஞானத்தினால் விவேகமில்லாமல் இருந்து வரும் ஸமயத்தில் எனக்கு "ப்ரும்மைவ ஸத்யம்" என்ற தத்துவ ஞானத்தை தந்து, சண்டாளன் பிராமணன் என்ற பேத ஞானத்தை போக்கடித்த மஹானுபாவனாக இந்த என் முன்னால் நிற்கும் புருஷன் இருந்து வருகிறபடியால்,

**"गुशब्दः अन्धकारः स्यात् रुशब्दः तन्निरोधकः ।**
**अन्धकारनिरोधित्वात् गुरुरित्यभिधीयते ॥"**

**"குசப்த: அந்தகார: ஸ்யாத் ருசப்த: தன்நிரோதக: ।**
**அந்தகார நிரோதித்வாத் குருரித்ய பிதீயதே"**

என்ற சாஸ்திரத்தை அனுஸரித்து, அவன் எனக்கு ஆசாரியனேதான். மேலும் நித்ய, சுத்தாத்ம விஞ்ஞானத்தினால் ஜாதி, குலம் இவைகளில் அபிமானம் போய் விடுகின்றபடியால்,. சண்டாளனுக்கும் குருத்வம் ஸித்திக்கின்றது.

**ब्रह्मैवाहमिदं जगच्च सकलं चिन्मात्र विस्तारितं**
**सर्व चैतद विद्यया त्रिगुणयाऽशेष मया कल्पितम् ।**
**इत्थं यस्य दृढा मतिः सुखतरे नित्ये परे निर्मले**
**चाण्डालोऽस्तु स तु द्विजोऽस्तु गुरुरित्येषा मनीषा मम ||2||**

# மனீஷா பஞ்சகம்

**ப்ரும்மைவாஹமிதம் ஜகச்ச ஸகலம்**
**சின்மாத்ர விஸ்தாரிதம்**
**ஸர்வம் சைத்தவித்யயா த்ரிகுணயா அசேஷம்**
**மயா கல்பிதம் |**
**இத்தம் யஸ்ய த்ருடா மதி: ஸுகதரே**
**நித்யே பரே நிர்மலே**
**சாண்டா ளோஸ்து ஸது த்விஜோஸ்து**
**குரு ரித்யேஷா மனீஷா மம** || 2 ||

அஹம் ப்ரஹ்மைவ = நான் ப்ரும்மமே, இதம் ஸகலம் ஜகத் ச = இந்த எல்லா உலகமும், சிந்மாத்ரவிஸ்தாரிதம் = அறிவிலேயே பரவி இருக்கின்றது. ஏதத் ஸர்வம் ச = இவை எல்லாம், த்ரிகுணயா = ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களையுடைய, அவித்யயா = அவித்தையினால் (தோன்றுகிறது), அசேஷம் = எல்லாம், மயா கல்பிதம் = என்னால் கல்பிக்கப்பட்டது, இத்தம் = இவ்விதம், யஸ்ய = எவனுக்கு, ஸுகதரே = சுகமயமானதும், நித்யே = அழிவற்றதும், நிர்மலே = சுத்தமானதுமான, பரே = பரப்ரம்மத்தினிடத்தில், த்ருடாமதி: = உறுதியான எண்ணம், அஸ்தி = இருக்கிறதோ, ஸ: து = அவன், சண்டாள: அஸ்து = சண்டாளனாக இருக்கட்டும், த்விஜ: அஸ்து = ப்ராமணனாக இருக்கட்டும், ஸ: = அவன், குரு: = (எனக்கு) பூஜிக்கத்தகுந்த ஆசாரியன், இதி ஏஷா மனீஷா = என்ற இந்த எண்ணம், மம = எனக்கு, அஸ்தி = இருக்கிறது.

**தாத்பர்யம்:**

முன் ஸ்லோகத்தினால் ஆத்ம ஸ்வரூபம் ஸர்வத்திற்கும் விலக்ஷணமாக இருந்துகொண்டு ஸாக்ஷியாக இருந்து வருகிறது என்று சொல்லப்பட்டது.

ப்ரக்ருதத்தில், ஸர்வ ஜகத்தும் பொய்யென்றும், அதனாலேயே கல்பிதமென்றும், ஆத்ம ஸ்வரூபந்தான் ஸகலத்திற்கும் காரணமாக இருந்து வருகிறது என்றும் இந்த ஸ்லோகத்தினால் நிரூபிக்கப்படுகின்றது.

ஆத்ம ஸ்வரூபத்தை பரப்ரும்மமாக ஸாக்ஷாத் கரித்துக்கொண்ட ஞானிகள் இருந்துவரும் நிலையோ, ஸம்சயமற்ற ஞானத்தாலும், "அஹம் ப்ருஹ்மாஸ்மி" என்று தங்களுக்கு ஏற்பட்ட விஞ்ஞானம் என்ற ஸ்வானுபவத்தாலும். ஆத்மாவிலேயே ரமித்துக் கொண்டு இருந்து வருவார்கள்.

அப்பேர்ப்பட்ட ஞானிகளுடைய ஹிருதய புண்டரீகமானது எப்பொழுது பார்த்தாலும் ப்ரத்ய காத்மாவைக்காட்டிலும் வேறுபடாததான பரப்ரும்ம ஸ்வரூபமாகவே பாஸித்துவரும்.

மேலும் தேகமானது . ஜடமானதினால் ஒரு காலத்திலும் ஆத்மாவாகாது, ஆத்மாவும் கேவலம் ஸாக்ஷியாக இருந்து வருவதால் தேஹமாகவும் ஆக முடியாது.

ஆனால் அஞ்ஞானத்தினால் அவித்துவான்கள் தேஹத்தையே ஆத்மாவாக அனுபவித்து வருகிறார்கள்.

உண்மையில் பாஞ்சபௌதிகமான ஸ்தூல தேஹத்தை ஞானத்தால் பிரித்து. ஆத்மஸ்வரூபத்தை பார்த்தால். ஆத்மா ப்ரும்மமாகவே பாவித்து வரும்.

सर्व ब्रह्मैव "ஸர்வம் ப்ரும்மைவ" என்ற அனுபவத்தைத்தான் வித்துவான்கள் ஸ்வானுபூதி என்று சொல்லுவார்கள்.

**'"सर्वं खल्विदं ब्रह्म तज्जलानीति शान्त उपासीत ।"**

**"ஸர்வம் கல்விதம் ப்ரம்ம தஜ்ஜலா நீதி சாந்த உபாஸீத"**

என்ற ச்ருதியை. அனுஸரித்து த்வைதப்ரபஞ்சமெல்லாம் ப்ரும்மத்தினிடத்தில்தான் ப்ரதிஷ்டிதமாயிருந்து வருகிறது. ப்ரும்மத்தினாலேயே ரக்ஷிக்கப்பட்டு வருகிறது. ப்ரும்மத்தினிடத்தில்தான் பிரளய காலத்தில் லயிக்கிறது.

உதாரணமாக, மண்ணிலிருந்து குடம் உண்டாகி, மண்ணிலேயே ப்ரதிஷ்டிதமாகி, மண்ணிலேயே லயிக்கிற தென்பது அனுபவஸித்தமானதினால் ப்ரக்ருதத்திலும் ப்ரும்மத்தினிடத்திலிருந்து உண்டாகி, அதிலேயே ப்ரதிஷ்டிதமாகி அதிலேயே லயிக்கிற இந்த ஜகத்தானது ப்ரும்மத்திற்கு வேறாக ஒரு காலத்திலும் ஆகாது.

ஆகையினால் எந்த வஸ்து எதிலிருந்து உண்டாகி, எதனால் ரக்ஷிக்கப்பட்டு, எதில் லயத்தை அடைகின்றதோ, அந்த வஸ்து அதைக்காட்டிலும் வேறல்ல என்பது ஸ்பஷ்டமாக ஸித்திக்கிறது.

தவிரவும், ஸர்வத்திற்கும் அதிஷ்டானமாகிய ஆத்ம ஸ்வரூபத்தில் உண்மையில் லவம்கூட த்வைதப்ரபஞ்சம் ஏற்படுவதற்கு ப்ரஸக்தியில்லாமல் இருக்கும்பொழுதே அதை இருப்பதுபோல் தோன்றச் செய்துகொண்டும், அவ்விதமே "நித்ய, சுத்த. புத்த, முக்த" ஸ்வபாவத்தோடு கூடி விளங்கிவருகின்ற ஆத்ம ஸ்வரூபத்தை இருப்பதாக தோன்றாமல் செய்துகொண்டும், இருப்பதற்கு ஒரு காரணம் அவசியமிருக்கவேண்டுமல்லவா?

இருக்கும் பொருளை மறைக்கின்ற சக்திக்கு ஆவரண சக்தி என்றும், இல்லாததை இருப்பதுபோல் காட்டுவதற்கு விக்ஷேபண சக்தி என்றும் பெயர்.

ஆவரணம், விக்ஷேபணம் என்ற இரண்டு விதமான காரியங்களும் ஸத்வ ரஜோ தமகுணங்களுடைய அவித்தையினால் செய்யப்படுகின்றது.

இவ்விதம் காலத்திலும் இல்லாததான ஜகத்தை ஸத்யம்போல் தோன்றச்செய்வதற்கு அவித்தைதான் மூலகாரண பூதமாக ஆகின்றது. அதனால்த் தான்.

**“नेहनानास्ति किञ्चन"**
**"विमतं मिथ्या दृश्यत्वात् जडत्वात्,**
**परिच्छिन्नत्वात्, शुक्तिरजतवत्”**
**"विमतं मिथ्या, आद्यन्तयोः**
**अविद्यमानत्वात् स्वप्नवत्"**

**“நேஹ நாநாஸ்தி கிஞ்சன”**
**"விமதம் மித்யா த்ருச்யத்வாத் ஜடத்வாத்**
**பரிச்சின்னத்வாத் சுக்திரஜதவத்”**
**"விமத மித்யா ஆத்யந்தயோ:**
**அவித்யமானத்வாத் ஸ்வப்னவத்”**

என்ற ச்ருதிதர்க்கங்களினால் த்வைத ப்ரபஞ்சமானது கல்பிதமென்றும் பொய் யென்றும் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. மேலும், ஸத்வகுணம், ரஜோகுணம், தமோ குணம் என்ற மூன்று குணங்களையுடைய அவித்தையினால் கயிற்றில் ஸர்ப்பம் எப்படி கல்பிக்கப்படுகின்றதோ, அதேமாதிரி ப்ரும்மத்தினிடத்தில் கல்பிக்கப்பட்டு அறிவாகிற ப்ரத்யகாத்மாவிலேயே இந்த ஸர்வ ஜகத்தும் பரவியிருக்கிறது.

த்ருச்யமாகக்காணும் கல்பிதமான ப்ரபஞ்சமோ கேவலம் அவித்தையின் காரியமானதினால், அவித்தைக்குப் பின்பு வந்தது.

அவித்தைக்குப் பின்பு வந்த இந்த ப்ரபஞ்சமானது அவித்தைக்கு ஆச்ரயமாக முடியாது, ஏனென்றால், அவித்தையே ப்ரும்மத்தை ஆச்ரயமாக வைத்துக் கொண்டு தான் இந்த த்வைத ப்ரபஞ்சத்தை, கல்பிப்பதற்கு ஸாமர்த்தியமுள்ள தாக ஆகின்றது. அன்னியில் இந்த த்வைத ப்ரபஞ்சத்தை கல்பிப்பதற்கு அவித்தையினால் முடியாது. மேலும், அவித்தையானது வித்தையினுடைய அபாவமாக இருப்பதால் ஸ்வரூபமற்றதாயிருக்கின்றது. ஆதலால், அவித்தைக்கு முன்னமேயே இருக்கும் சித்ரூபமான பரப்ரும்மந்தான் அவித்தைக்குப் பின்பு வந்த ப்ரபஞ்சத்திற்கு ஆச்ரயமாக இருந்து வருகிறது என்பது வெளியாகிறது.

இவ்விதம் ஒரு காலத்தில் பிரகாசித்துக்கொண்டு, மற்றொரு காலத்தில் பிரகாசிக்காமல் இருப்பதனாலேயே இந்த ஜகத்தானது ப்ரும்மத்தில் கல்பிதம் என்று ஏற்படுகிறது.

மேலும், கானல் நீர், கண்ணாடியில் முகம், கயிற்றில் பாம்பு, கிளிஞ்சலில் வெள்ளி, மரத்தில் பொம்மை, தங்கத்தில் ஆபரணம், மண்ணில் குடம் போலவே த்ருச்யமாகக்காணும் ஸகல த்வைத ப்ரபஞ்சமும் அவித்தையினால் கல்பிக்கப்பட்டபோதிலும், ஸர்வத்திற்கும் அதிஷ்டானமான ப்ரும்மத்தைக் காட்டிலும் வேறுபட்டதல்ல என்பதை வேதாந்த யுக்திகளினாலும், குருவின் கடாக்ஷத்தினாலும் தெளிவாகத் தெரிந்து

# மனீஷா பஞ்சகம்

**"सर्वं ब्रह्ममयं जगत्"** **'"ब्रह्मैवाह"** **"अहं ब्रह्मास्मि"**
**"प्रज्ञानं ब्रह्मा"** **"अयमात्मा ब्रह्मा"** **"तत्वमसि"**

**"ஸர்வம் ப்ரும்மயம் ஜகத்"**
**"ப்ரும்மைவாஹம்"**
**"அஹம் ப்ரும்மாஸ்மி"**
**"ப்ரக்ஞானம் ப்ரும்மா"**
**"அயமாத்மா ப்ரும்மா"**
**"தத்வமஸி"**

என்னும் அகண்ட ப்ரும்மாத்மைக்ய வ்ருத்தி ஞானத்தை, அகங்கார மமகாரமில்லாமல் அப்யசிப்பதால், மனோநாசமும் அதனால் அந்தக்கரணத்திலுள்ள வாஸனா நாசமும் ஏற்பட்டு, ஆத்மஸ்வரூபத்தை பரப்ரும்மமாகவே ஞானிகள் அனுபவித்து வருவார்கள்.

இவ்வித மஹிமையுள்ள ஞானிகள், சுகமயமானதும், அழிவற்றதாயும், நிர்மலமானதும், காரிய காரணமற்றதாயும் உள்ள நிஷ்க்ரிய, நிர்விசேஷ, நிரா கார, ஸர்வாத்மக, ஸச்சிதானந்த, அத்வைத, ஸ்வப்ர காச சிதேகரஸ பரப்ரும்மத்தினிடத்தில் ஸர்வ ஜகத்தும் அவித்தையினால் கல்பிக்கப்பட்டது என்ற உறுதியான எண்ணத்துடன் இருந்து வருகின்றார்கள்.

இவ்விதம் எவனுக்கு ஸர்வ ஜகத்தும் கல்பிதமென்றும் ஒன்றுதான் ஸத்யமான வஸ்து என்றும் த்ருடமான எண்ணம் இருக்கின்றதோ, அவன் நித்ய, சுத்த, புத்த பரப்ரும்மமேதான் இப்பேர்ப்பட்ட ஞானிகளை ச்ருதிகளும் ப்ரும்ம மென்றே போதிக்கின்றன.

இந் நிலையையடைந்த புருஷன் யாராக இருந்தாலென்ன; சண்டாளனாகத்தானிருக்கட்டும் அல்லது பிராமணனாகத்தானிருக்கட்டும், அவன் தத்வ உபதேசத்தை போதிக்கின்ற குரு மூர்த்தியேதான் என்ற எண்ணம் எனக்கு மிகவும் உறுதியாக இருக்கிறது என்று பகவத்பாதாள் ஸ்வானுபூதியை பிரகடனம் செய்து காட்டினார்கள்.

**शश्वन्नश्वरमेव विश्वमकिलं निश्चित्य वाचा गुरोः**
**नित्यं ब्रह्म निरन्तरं विमृशतां निर्व्याजशान्तात्मनाम् ।**
**भूतं भावि च दुष्कृतं प्रदहतां संविन्मये पावके**
**प्रारब्धाय समर्पितं स्ववपुरित्येषा मनीषा मम ॥ ३ ॥**

# மனீஷா பஞ்சகம்

**சச்வன் நச்வரமேவ விச்வமகிலம்**
**நிச்சித்ய வாசா குரோ:**
**நித்யம் ப்ரும்ம நிரந்தரம் விம்ருசதாம்**
**நிர்வ்யாஜ சாந்தாத்மனாம் |**
**பூதம் பாவிச துஷ்க்ருதம் ப்ரதஹதாம்**
**ஸம்வின்மயே பாவகே**
**ப்ராரப்தாய ஸமர்ப்பிதம் ஸ்வபுரித்யேஷா**
**மனீஷா மம** || 3 ||

**அகிலம் விச்வம்** = எல்லா உலகமும், **சச்வத்** = எப்பொழுதும் (நிச்சயமாய்) **நச்வரம் ஏவ** = அழிகின்றதே, **இதி குரோ: வாசா நிச்சித்ய** = என்று குருவின் வாக்கினால் தீர்மானித்து, **நித்யம் ப்ரஹ்ம** = அழிவற்ற ப்ரம்மத்தை, **நிரந்தரம்** = எப்பொழுதும், **விம்ருசதாம்** = த்யானிக்கின்றவரும், **நிர்வ்யாஜசாந்தாத்மனாம்** = கபடமின்றி அடக்கமுள்ள மனதை உடையவரும், **பூதம்** = செய்ததும், **பாவி ச** = செய்யப்போகின்றதுமான, **துஷ்க்ருதம்** = புண்யபாபகர்மங்களை, **ஸம்வின் மயே பாவகே** = அறிவாகிற நெருப்பில், **ப்ரத ஹதாம்** = எறிப்பவரும், **ஸ்வவபு:** = தன்னுடைய சரீரம், **ப்ராரப்தாய ஸமர்பிதம்** = பலனை கொடுக்க ஆரம்பித்த கர்மத்திற்கு ஒப்படைக்கப்பட்டிருக்கிறது, **இதி** (**சிந்தயதாம்**) = என்று நினைப்பவருமான புருஷன், (**குரு:**) = ஆசாரியன், **இதி ஏஷா மனீஷா** = என்ற இந்த எண்ணம், **மம அஸ்தி** = எனக்கு இருக்கிறது.

**தாத்பர்யம்:**

முன் ஸ்லோகத்தினால் ஜகத்தினுடைய மித்யத்வம், அதாவது கல்பிதத்துவம் சொல்லப்பட்டது. இந்த ஸ்லோகத்தினால் ஜகத்தானது அநித்யம் என்பதும்கூட நிரூபிக்கப்படுகிறது.

ஜீவப்ரும்ம ஐக்கியத்தை உபதேசிக்கும் ஞான தாதாவான ஸத்குருவினுடைய உபதேசத்தினால்தான் பாரமார்த்திகமான மோக்ஷ சாம்ராஜ்யத்தை அடைய முடியும்.

அவித்தையினால் கல்பிக்கப்பட்ட இந்த ஸர்வ த்ருச்ய ப்ரபஞ்சமும் நிச்சயமாக வித்தையினால் அழிந்தேதான் தீரவேண்டும். ஆகிலும் ஞானம் வருகின்ற வரையிலும் ஜகத்தானது ஸத்யம்போல்தான் பாலித்து வருகிறது.

அவித்துவான்களோ என்றால் அஸத்யமான இந்த ஜகத்தை ஸத்தியமாகவே அனுபவித்து வருகிறார்கள்.

உண்மையில்

**"नेह नानास्ति किञ्चन"**

**"நேஹ நாநாஸ்தி கிஞ்சந"**

என்ற ச்ருதியானது. ஒரு காலத்திலும் இல்லாமலேயே இருக்கப்பட்ட த்ருச்ய பிரபஞ்சத்தை ஸத்யம்போல் அனுபவித்துக்கொண்டிருக்கும் அவித்வான்களுடைய விஷயத்தில், ஸர்வ ஜகத்தும் அனுபவித்துக்கொண்டிருக்கும் ஸமயத்திலேயே பொய் என்று போதிக்கிறது.

மேல் சொன்ன ஆத்மஞானமானது சுத்தமான அந்தக்கரணத்தில் தான் ஸ்புரிக்கும் என்பதால் மனதை ராக த்வேஷமில்லாமல் மிகவும் நிர்மலமாகவே வைத்துக் கொண்டிருக்க யத்னம் செய்யவேண்டும்.

அநேக கோடி. ஜன்மாக்களில் செய்த புண்யத்தினுடைய ஒரு மஹிமையினால் தான் இந்த ஜன்மாவில் ஆத்மாவை ப்ரும்மம் என்று ஸாக்ஷாத்கரித்துக் கொள்வதற்கு உள்ள எண்ணமானது ஏற்படும். அன்னியில் இந்த எண்ணம் ஏற்படுவதற்கே ப்ரசக்தியில்லை

அப்படி ஆத்மஞானத்தை அடையவேண்டும் என்ற எண்ணமே ஆத்மாவை ப்ரும்மம் என்று அனுபவிக்க யத்னம் செய்வதற்கு முக்கியமான காரணமாகும்.

அதற்குள்ள யத்ன விசேஷமோ வேதாந்த விசாரம் தான்.

**"परीक्ष्य लोकान् कर्मचितान् ब्राह्मणो**
**निर्वेदमायात् नास्त्यकृतः कृतेन**
**तद्विज्ञानार्थं स गुरुमेवाभिगच्छेत्**
**समित्याणिः श्रोत्रियं ब्रह्मनिष्ठ**

**"பரீக்ஷ்யலோகாந் கர்மசிதாந் ப்ராம்மணோ**
**நிர்வேதமாயாத் நாஸ்த்யக்ருத: க்ருதேந**
**தத்விக்ஞாநார்த்தம் ஸ குருமேவாபிகச்சேத்**
**ஸமித்பாணி: ச்ரோத்ரியம் ப்ரம்மநிஷ்டம்"**

என்ற ச்ருதியை அனுசரித்து, கர்ம பலத்தில் வைராக்யத்தை அடைந்து. மோக்ஷம் என்ற பாரமார்த்திகமான புருஷார்த்தமானது. கேவலம் கர்மாவினால் ஸாத்திய மாகாது என்று தீர்மானித்து, தான் ஸ்வயமாகவே தர்க்கத்தினாலும் புஸ்தகம் படிப்பதினாலும் மோக்ஷத்தை அடைய முடியாது என்ற த்ருடமான எண்ணத்துடன். ஒரு ஸத்குருவை அண்டி விதிவத்தாக சாஷ்டாங்கமாக சரணமடைந்து, அந்த ஸத்குருவினுடைய முகாரவிந்தங்களிலிருந்து வெளிவரும் உபதேசங்களை சிரஸில் வகித்து, ச்ரவணமனனம் செய்வதற்குத் தான் வேதாந்த விசாரம் என்று பெயர்.

அத்தகைய வைபவத்தையுடைய சிஷ்யனுடைய விஷயத்தில் குருவானவர் மிகவும் கருணை வைத்து, அவனுடைய ஜன்மாவை சபலம் செய்து வைக்க வேண்டும் என்று தீர்மானித்து.

"तद्विज्ञानं ब्रह्म"
"यो वेत्तिविश्वं न च तस्य वेत्ता तमाहुरग्यं पुरुषं पुराणं"
"तस्य भासा सर्वमिदं विभाति"
"आत्मावा इदमेक एवाग्र आसीत्"
"यत्र नान्यत्पश्यति" " अनन्तरमबाह्यं"
"अशरीरम् शरीरेषु" "योऽयं विज्ञानमय पुरुषः"
"असङ्गऽह्यायं पुरुषः" "योऽयमविनाशी पुरुषः
"प्रत्यगानन्दमयः पुरुषः" " तत्वमसि"
"विज्ञानमानन्दं ब्रह्म" "आत्मैवेदं सर्व"
"नेति नेति" "सएषनेति"
"सर्व खल्विदं ब्रह्म" " अयमात्मा ब्रह्म"
"सत्यं ज्ञानं अनन्तं ब्रह्म"
स्मृतिश्च

"क्षेत्रज्ञं चापि मां विद्धि" "समं सर्वेषु भूतेषु"
"उत्तमः पुरुषस्त्वन्यः" "न जायते म्रियते वा"
"वासुदेवःसर्वमिति" "अनदित्यान्निर्गुणत्वात्"

"தத்விக்ஞானம் ப்ரும்ம"
"யோ வேத்தி விச்வம்) நச தச்ய வேத்தா
"தமாஹுரக்ரியம் புருஷம் புராணம்"
"தச்ய பாலா ஸர்வமிதம் விபாதி"
"ஆத்மாவா இதமேகஏவாக்ர ஆஸீத்"
"யத்ர நான்யத் பச்யதி"
"அனந்ரமபாஹ்யம்"
"அசரீரம் சரீரேஷ"
"யோயம் விக்ஞான மய: புருஷ:"
"அஸங்கோ அயம் புருஷ:"
"யோ அயமவிநாசீ புருஷ:"
"ப்ரத்யகானந்தமய புருஷ:"
"தத்வமஸி" "விக்ஞானமானந்தம் ப்ரும்ம"
"ஆத்மை வேதம் ஸர்வம்"
"நேதி நேதி" "ஸ ஏஷ நேதி"
"ஸர்வம் கல்விதம் ப்ரும்ம"
"அயமாத்மா ப்ரும்ம"
"ஸத்யம் ஞானம் அனந்தம் ப்ரும்ம"

**ஸ்மிருதியிலும்:**

**"க்ஷேத்ரஞ்யம் சாபி மாம்வித்தி"**
**"ஸமம் ஸர்வேஷு பூதேஷு"**
**"உத்தம: புருஷஸ்த்வன்ய:"**
**"ந ஜாயதே ம்ரியதே வா"**
**"வாஸுதேவ: ஸர்வ மிதி"**
**"அனதித்வாந் நிர்குணத்வாத்"**

என்பது முதலான ச்ருதி, ஸ்மிருதிகளை மூலமாக வைத்துக்கொண்டு, தர்க்கம், ஞாயம் முதலானவைகளினாலும், வேதாந்த யுக்திகளினாலும், தன்னுடைய ஸ்வானுபூதியினாலும், தன்னுடைய பரிபூரணமான அனுக்கிரஹ விசேஷத் தினாலும் த்ருச்யமாகத் தோன்றும் த்வைத ப்ரபஞ்சமெல்லாம் ஞானாக்னியினால் நிச்சயமாக நாசத்தை அடைந்துவிவடும் என்ற ஒரு உறுதி ஞானத்தை சிஷ்யனுக்கு கொடுத்து. அதன் மஹிமையினால் அவனுடைய மனதை ராகத்வேஷமில்லாமல் மிகவும் நிர்மலமாகச் செய்து. அவனை ஸதா காலமும் அழிவற்றதாயும், காரிய காரணமற்றதாயும் உள்ள பரப்ரும்மத்தை ஆத்ம ஸ்வரூபமாகவே அனுபவிப்பதற்கு உள்ள ஒரு பாக்கிய விசேஷத்தை அளிக்கிறார்.

இத்தகைய மஹிமையுள்ள ஞானத்தை அடைந்த சிஷ்யனோ வென்றால்

**"यथैधांसि समिद्धोऽग्निभस्मसात्कुरुतेऽर्जुन ।**
**ज्ञानाग्निः सर्वकर्माणि भस्मसात्कुरुते तथा ।।**

**"யதைதாம்ஸி ஸமித்தோக்னி பஸ்மஸாத் குருதே அர்ஜுன**
**ஞானாக்னி: ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதே ததா"**

என்ற கீதா சாஸ்திரத்தை அனுஸரித்து, இந்த ஜன்மாவில் செய்ததும், வரும் ஜன்மாவில் செய்யப் போகின்றதுமான புண்ய பாபகர்மாக்களை ஞானமாகின்ற அக்கினியினால் எரித்து, தன்னுடைய ஸ்தூல சரீரத்தை, பலனைத்தர ஆரம்பித்த கர்மத்திற்கு ஒப்படைக்கப்பட்டிருக்கிறது என்று ஆத்மா ராமனாக இருந்து வருவான்.

மேலும் ஸர்பமானது தன்னுடைய தோல் சட்டையை உரித்துவிட்டால். மறுபடியும் அந்த சட்டையில் அதற்கு எப்படி அபிமானமானது ஏற் படாதோ, அதுபோலவே ஜீவப்ரும்ம ஐக்கிய ஸாக்ஷாத்காயத்தை அடைந்த ஞானிகளும் தான் ப்ரும்மம் என்று அறிந்தவுடன், ரக்தம். மாமிசம், எலும்பு, சதை, நரம்பு முதலியவைகளினால் செய்யப்பட்ட ஸ்தூல சரீரத்தை தன்னுடையதில்லை என்று தள்ளிவிட்டு, மறுபடியும் அதில் அபிமானத்தை வைக்காமல் ப்ரும்மானந்த த்தை அனுபவித்து வருவார்கள்.

இவ்விதமாக உள்ள ஜீவன் முக்தர்கள் செய்து வரும் கர்மாக்கள் அந்த ஞானிகளை கொஞ்சம்கூட பாதிக்காது என்பதற்கு,

**“लिप्यते न स पापेन पद्मपत्रमिवाम्भसा ॥”**

**"லிப்யதே நவ பாபேந பத்மபத்ர மிவாம்பலா",**

என்ற சாஸ்திரமே பிரமாணமாகும்.

அப்படியானால் ஸஞ்சித கர்மாவைப்போல் ப்ராரப்த கர்மாவும் ஏன் ஞானோதய சமயத்தில் நாசத்தை அடையக்கூடாது என்ற சங்கைக்கு ஸமா தானத்தை அடியிற்கண்டபடி அறியவும்.

அதாவது முன் ஜன்மாவில் செய்த புண்யபாப கர்மாக்களுடைய பலனை அனுபவிப்பதற்காகத்தான் சரீரமானது இஹஜன்மாவில் கொடுக்கப்பட்டிருக்கிறது என்பதை ஸ்பஷ்டமாக காட்டுவதற்காகத்தான்.

**“प्रारब्धाय समर्पितं स्ववपुः”**

**“ப்ராரப்தாய ஸமர்ப்பிதம் ஸ்வவபு:”**

என்ற பதமானது பகவத் பூஜ்ய பாதர்களினால் ஸ்லோகத்தில் பிரயோகம் செய்யப்பட்டிருக்கிறது. இதிலிருந்து ப்ராரப்த கர்மாவை அனுபவித்தேதான் தீரவேண்டும் என்பது வெளியாகிறது. எனினும் ப்ராரப்த கர்மாவின் முழுபலனை அனுபவிப்பதற்கு முன்பாகவே ப்ரும்ம ஞானத்தை அடைந்துவிட்டபோதிலும்கூட, ப்ராரப்தத்தின் பலனை அனுபவிப்பதற்காகவே கொடுக்கப்பட்ட ஸ்தூல சரீரத்தை தானாகவே அழியும் வரையில் வைத்துக்கொண்டுதானிருக்கவேண்டும். அதற்கு வேறு வழி ஒன்றுமே யில்லை.

அப்படியானால் ஸ்தூல சரீரம் பாஸிப்பதற்கு காரணபூதமான அவித்தை யானது வித்தையினால் நாசத்தை அடையும்பொழுது அந்த அவித்தையினுடைய கார்யமாக இருக்கப்பட்ட ஸ்தூல சரீரமானது எப்படி பாஸிக்கும் என்ற சங்கைக்கு ஸமாதானமோ என்றால், அதாவது ஒரு குயவனானவன் தான் குடங்கள் செய்யும் சக்கரத்தை சுழற்றுவது என்பதை நிறுத்தி விட்டபோதிலும் அந்த சக்கரமானது எப்படி சுழன்று கொண்டேதானிருக்கிறதோ, எப்படி வில்லிலிருந்து பாணமானது வெளி வந்தவுடன் ஸ்வாதந்திரியத்துடன் போய்க்கொண்டிருக்கிறதோ அதே மாதிரியாக அவித்தையினால் செய்யப்பட்ட இந்த ஸ்தூல சரீரமானது, அவித்யா நாசத்திற்கு பிறகும்கூட பாஸித்து வருகிறது.

இதிலிருந்து என்ன வெளியாகிறதென்றால், வில்லிலிருந்து பாணத்தை விடும் விஷயத்தில் தான் ஸ்வாதந்திரியம் இருந்ததே தவிர, விடப்பட்ட பாணத்தின் விஷயத்தில் ஸவாதந்திரியம் காணப்படவில்லை. அதே மாதிரியாகத்தான் அவித்தையானது வித்தையினால் நாசத்தை அடைந்த போதிலும் கூட, அவித்தை

யினால் கல்பிக்கப்பட்ட தேகமானது வித்தையினால் நாசத்தை அடையாமல் பாஸித்து வருகிறது. இந்த ரஹஸ்யத்தை ஆசார்யாள்,

**“ब्रह्मात्मज्ञाने जाते तेन बाधितस्यापि प्रारब्धकर्मण: फलम नुवर्तते ।**
**अतएव ज्ञानिनस्तु प्रारब्धवेगवशादेहादि प्रतिभासते इति ।।“**

**“ப்ரும்மாத்ம ஞானே ஜாதே தேன பாதி**
**தஸ்யாபிப்ராரப்த கர்மண: பலமனுவர்ததே,**
**அதஏவ ஞானினஸ்து ப்ராரப்த**
**வேகவராத்தேஹாதி ப்ரதிபாவதே இதி”**

என்பது முதலான வாக்கியங்களினால் ப்ரகிரண க்ரந்தங்களில் ஸூசனம் செய்து காட்டியிருக்கிறார்கள். அப்படியானால் எப்படித்தான் அந்த ப்ராரப்த கர்மாவானது நாசத்தை அடையும்?

புண்ய பாபங்களை அனுபவித்து அனுபவித்து அந்த புண்ய பாபங்கள் குறைந்து போனதும், ப்ராரப்த கர்மாவதனது நாசத்தை யடைகின்றது, இப்படி பிராரப்த கர்மாவானது நாசத்தை அடைந்ததும், ப்ராரப்த பலனை அனுபவிப்பதற்காக ஒப்படைக்கப்பட்டிருக்கிற ஸ்தூல தேகமும் நாசத்தை அடைகின்றது. இவ்விதம் ஞானியானவன் ப்ராரப்த கர்மாவை நாசமடையும்படி செய்துவிட்டு. அகண்ட ஸச்சிதானந்த பரப்ரும்மமாக ஆகிறான்.

இப்பேர்ப்பட்ட வைபவத்தோடு கூடியுள்ள உறுதியான ஞானத்தையுடைய, இந்த என் முன்னால் சண்டாள ஸ்வரூபத்தில் இருக்கும் புருஷன் ப்ரும்ம ஸாக்ஷாத்காரத்தை அடைந்திருக்கின்றபடியாலும், எனக்கு **“अयमाथाम ब्रह्मा”** **“அயமாத்மா ப்ரும்மா”** என்ற தத்துவத்தை உபதேசித்தபடியாலும், அவன் எனக்கு ஆசாரியனுடைய ஸ்தானத்தில் இருந்து வருகிறான் என்பதில் எனக்கு நிச்சயமான எண்ணம் இருக்கிறது என்று பகவத்பூஜ்ய பாதாள் தன்னுடைய ஸ்வானுபூதியை பிரகடனம் செய்தார்கள்.

**या तिथङ्नरदेवताभिरहमित्यन्त: स्फुटा गृह्यते**
**यद्भासा हृदयाशदेहविषया भान्ति स्वतोऽचेतना: ।**
**तां भास्यै: पिहितार्कमण्डलनिभां स्फूर्तिं सदा भावयन्**
**योगी निर्वतमानस: स गुरुरित्येषा मनीषा मम ।। ४ ।।**

**யா திர்யங் நரதேவதாபிரஹமித்யந்த:**
**ஸ்புடா க்ருஹ்யதே**
**யத்பாஸா ஹ்ருதயாக்ஷ தேஹவிஷயா**
**பாந்தி ஸ்வதோ அசேதனா:**
**தாம் பாஷ்யை: பிஹிதார்கமண்டல நிபாம்**
**ஸ்பூர்த்திம் ஸதா பாவயன்**
**யோகீ நிர்வ்ருதமானஸ: வ**
**குருரித்யேஷா மனீஷா மம** || 4 ||

**யா** = எந்த அறிவு, **திர்யங்நரதேவதாபி:** = மிருகங்கள், தேவதைகள், மனிதர்கள் இவர்களால், **அஹம் இதி** = நான் என்று, **அந்த:** = உள்ளே, **ஸ்புடா** = தெளிவாக, **க்ருஹ்யதே** = அறியப்படுகின்றதோ, **யத்பாஸா** = எதனுடைய ஒளியால், **ஸ்வத: அசேதனா:** = இயற்கையில் அறிவற்ற, **ஹ்ருதயாக்ஷதேஹவிஷயா:** = மனது, இந்திரியங்கள், தேகம், விஷயங்கள் என்ற இவைகள், **பாந்தி** = விளங்குகின்றனவோ, **தாம்** = அந்த, **பாஸ்யை: பிஹிதார்கமண்டலநிபாம்** = விஷயங்களால் மறைக்கப்பட்ட சூர்யமண்டலம் போன்ற, **ஸ்பூர்திம்** = அறிவை, **ஸதா பாவயந்** = எப்பொழுதும் த்யானிக்கின்றவனும், **நிர்வ்ருதமாநஸ:** = சாந்தியுள்ள மனதை உடையவனுமான, **யோகீ** = யோகியானவன் (யாராக இருந்தாலும்), **குரு:** = ஆசாரியன், **இதி ஏஷா மனீஷா** = என்ற இந்த எண்ணம், **மம** = எனக்கு, **அஸ்தி** = இருக்கிறது.

**தாத்பர்யம்:**

பூர்வ ஸ்லோகத்தினால் ஸர்வ ஜகத்தும் கல்பிதம் என்றும் அநித்யமென்றும் நிரூபிக்கப்பட்டது. இந்த ஸ்லோகத்தினாலேயோ என்றால், ஆத்ம ஸ்வரூபமானது ஸ்வப்பிரகாச சிதேகரஸமாயிருக்கிற ப்ரும்ம சைதன்யம் என்று ஸித்தாந்தம் செய்யப்படுகிறது.

அதாவது நான் க்ருசனாக இருக்கிறேன், நான் சாப்பிட்டவனாக இருக்கிறேன். நான் போகிறேன், நான் நிற்கிறேன், நான் வருத்தப்படுகிறேன் என்றெல்லாம், அனுபவித்துக்கொண்டிருக்கிற தேகாத்மாவான ஜீவனுக்கு ஸ்வப்ரகாச சிதேகரஸமான பரப்ரும்மத்துடன் ஐக்கியமானது எவ்விதம் ஸித்திக்கும் என்று சங்கை ஏற்பட்டால் அது மிகவும் தவறானது.

"நான்" என்ற சப்தத்தினால் வியவ ஹரிக்கப்படும், ஆத்ம சைதன்யத்தின் சம்பந்தத்தினால், ஆத்மாவைப்போல் தோன்றுகின்ற பாஞ்ச பௌதிகமான தேகமென்ற அன்னமயகோச மென்ன, கர்மேந்திரிய பஞ்சகம், பஞ்ச ப்ராணன், என்ற பிராணமய கோசமென்ன, கர்மேந்திரியங்களுடன் கலந்த மனது என்ற மனோமய கோசமென்ன. ஞானேந்திரியத்தோடு கூடிய புத்தி என்ற விக்ஞானமய கோசமென்ன, ஆனந்தமய கோசமென்ன, அதாவது போகாயதனமான சரீரம், போகத்தை அனுபவிப்பதற்கு உபயோகமாக உள்ள பிராணன் மனது, புத்தி, போத்தாவான சிதாபாஸன் முதலியவைகளுக்கெல்லாம் ஆத்ம ஸ்வரூபம் கேவலம் ஸாக்ஷியாக

இருந்து வரும் காரணத்தினால், ஸத்ரூபமாயும் சித்ரூபமாயும் ஆனந்த ரூபமாயும் ஆத்மாவை தீர்மானிக்கவேண்டியிருக்கிறது.

ஆதலால் லிங்க சரீரந்தான் ஸுக துக்காதிகளை அனுபவிக்கின்றதே தவிர ஆத்மாவோ என்றால் ஸாக்ஷியாக மட்டும் இருந்து வருகிறது.

இவ்விதமான மஹிமையுள்ள ஞானமயமான பரமாத்மாவானவர். ஹிரண்ய கர்பனிலிருந்து சிற்றெரும்பு வரையிலுள்ள பிராணி வர்க்கங்களுக்குள் அகப்பட்டுக் கொண்ட மிருகங்களினாலும், மனிதர்களினாலும், தேவர்களினாலும். "நான்" என்று உள்ளே நிர்மலமாக அறியப்பட்டு பாஸித்து வருகின்றார். மேலும் சூரிய பகவானானவர் எப்படி ஸகல ஜகத்தையும் பிரகாசம் செய்துவைத்தபோதிலும், தான் பிரகாசம் செய்துவைக்கிறோம் என்ற அபிமானம் உடையவராக இல்லையோ அதேமாதிரி ஆத்மாவினால் தான் அசேதனமான சரீரம் முதலான வஸ்துக்க ளெல்லாம் சலனம் செய்யப்படுகின்றன என்ற அபிமானம் ஆத்மாவுக்கு இல்லை. தவிரவும்.

**"न तद्भासयते सूर्यो न शशांको न पावकः"**

**"ந தத்பாஸயதே ஸூர்யோ ந சசாங்கோ ந பாவக:"**

**न तत्र सूर्यो भाति न चन्द्रतारकं नेमाविद्युतो भान्ति कुतोऽयमग्निः ।**
**तमेव भान्तमनुभाति सर्वं तस्य भासा सर्वमिदं विभाति ।**

**ந தத்ர ஸ்யோ பாதி ந சந்த்ர தாரகம்**
**நேமா வித்யுதோ பாந்தி குதோய மக்னி: |**
**தமேவ பாந்த மனுபாதி வர்வம்**
**தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி ||**

என்ற ச்ருதி ஸ்மிருதிகளை அனுஸரித்து, அதாவது இயற்கையிலேயே ஜடமாகவும் அறிவற்றதாகவும் உள்ள தேகம், இந்திரியங்கள், பிராணன், புத்தி, மனது, விஷயாதிகள், த்வைத ப்ரபஞ்சம் ஆகிய இவைகளெல்லாம் வாஸ்த்தவத்தில் பரப்ரும்மத்தினுடைய ப்ரகாசத்தினால்த்தான் பாஸித்து வருகிறது.

அந்த பரப்ரும்மத்தையே ஆத்ம ஸ்வரூபமாக ச்ருதியானது, **"अयमात्मा ब्रह्मा"** "**அயமாத்மா ப்ரும்மா**" என்ற வாக்கியத்தினால் போதிக்கின்றது. இதிலிருந்து ஆத்மாவை ஸ்வப்ரகாசன் என்று நிச்சயிக்க வேண்டும். மேலும் ஆத்மாவை தெரிந்து அனுபவிப்பதற்கு,

**"नान्य: पन्था विधतेS यनाय"**

**"நான்ய: பந்தா வித்யதே அய நாய"**

என்ற ச்ருதியை அனுஸரித்து கேவலம் ஆத்ம ஞானத்தினால்தான் முடியும்.

அந்த ஆத்மாவோ என்றால் இந்திரியங்கள், தேகம், விஷயாதிகள் இவைகளினால், மேகம் எப்படி ஸுர்ய மண்டலத்தை மறைக்கின்றதோ அது மாதிரி மறைக்கப்பட்டிருக்கிறது.

அப்படி மறைக்கப்பட்டபோதிலும் ஆத்மாவானது சூரிய மண்டலம் போல் நிர்மலமாகத்தான் பாஸித்து வருகிறது. உபாதியினால்த்தான் மறைக்கப்பட்டது போல் இருக்கிறது.

ஞானத்தினால் விஷயாதிகளான உ.பாதியில் வைராக்கியத்தை வைத்து. அதாவது சரீரத்தில் இருக்கும் அபிமானத்தையெல்லாம் விட்டு, "நான்" என்று உள்ளே அனுபவிக்கப்படும் வஸ்துவை ப்ரும்மம் என்று தெரிந்து கொள்வதற்குத் தான் யோகம் என்று பெயர். இந்த தத்வமானது

**वृत्तिहीनं मनः कृत्वा क्षेत्रज्ञ परमात्मनि ।**
**एकीकृत्य विमुच्येत योगोऽयं मुख्य उच्यते ।।**

**"வ்ருத்திஹீனம் மன: க்ருத்வா க்ஷேத்ரக்ஞும் பரமாத்மனி**
**ஏகீக்ருத்ய விமுச்யேத யோகோயம் முக்ய உச்யதே"**

என்ற சாஸ்திரத்தினால் தெரிகிறது.

**''योगः अहं ब्रह्मेति जानम् ; तद्वान् योगी''**

**"யோக: அஹம் ப்ரஹ்மேதி ஞானம்; தத்வாந் யோகீ"**

என்ற ஸமாஸத்திலிருந்து "நான் ப்ரும்மம்" என்ற ஞானத்தோடுகூட இருப்பவனுக்குத்தான் "யோகி" என்று பெயர் என்று தெரிகிறது.

இந்த யோகிகள் இருக்கும் நிலையோ ஸம்சயமற்ற ஞானத்தாலும், தனக்கு ஏற்பட்ட ஸ்வானுபவத்தாலும், ஸத்குருவின் உபதேசத்தாலும், ஸுகத்தை கொடுக்கக்கூடிய இஷ்ட வஸ்து, துக்கத்தை கொடுக்கக்கூடிய அனிஷ்ட வஸ்து என்று இல்லாமலும், சாந்தியுள்ள மனதையுடையவனாகவும் இருந்து கொண்டு, ஸ்வப்ரகாச சிதேக ரஸமாக உள்ள பரப்ரும்மத்தை எப்பொழுது பார்த்தாலும் ஆத்மஸ்வரூபத்திற்கு வேறு படுத்தாமல் அகண்டாகார வ்ருத்தி ஞானத்தோடு **''अहं ब्रह्मास्मि**" "**அஹம் ப்ரும்மாஸ்மி**" என்று இருக்கும் நிலையே.

இவ்வித மஹிமையுள்ள யோகியானவன் யாராக இருந்தாலென்ன? அதாவது சண்டாளனாகத்தான் இருக்கட்டும் அல்லது பிராமணனாகத்தான் இருக்கட்டும், அவன் தத்துவ உபதேசத்தை செய்கின்ற குருவினுடைய ஸ்தானத்திற்கு அர்ஹதி உள்ளவன் தான்.

**"ब्रह्मैव सन् ब்रह्मैव भवति"**

**"ப்ரஹ்மைவ ஸந் ப்ரஹ்மைவ பவதி"**

என்று ச்ருதியானது போதிக்கின்றபடியால், இந்த என் முன் சண்டாள வேஷதாரியாக இருக்கின்ற ஞானியானவன் எனக்கு ஆசார்ய ஸ்தானத்தில் பூஜிக்கத்தகுந்த தெய்வமாக இருந்துவருகிறான் என்பதே என்னுடைய பரமஸித்தாந்தம் என்று பரமாசார்யாள் ஆத்மா ஸ்வப்ரகாசன் என்றதின் ஸ்வானுபூதியை பிரகாசப்படுத்தி னார்கள்.

ஆகையால் மோக்ஷம் என்ற பரம புருஷார்த்தமானது அநேக கோடி ஜன்மாக்களில் செய்த புண்ய வசத்தினால்தான் ஏற்படவேண்டுமே தவிர கேவலம் குதர்க்கங்களினால் ஏற்படக்கூடியதல்ல. மேலும் ஆத்மாவை ஸ்வயஞ்ஜோதி என்று அனுபவிப்பதற்கு பரமாசார்யாளுடைய பரிபூரண கடாக்ஷமானது மிகவும் அவசியம் என்பது இந்த ஸ்லோகத்திலிருந்து தெரியவருகிறது.

**यत्सौख्यांबुधिलेइलेशत इमे शक्रादयो निर्वृता**
**यच्चित्ते नितरां प्रशान्तकलने लब्ध्वा मुनिर्निर्वृतः ।**
**यस्मिन्नित्यसुखाम्बुधौ गलितधीब्रह्मैव न ब्रह्मविद्यः**
**कश्चित्स सुरेन्द्रवन्दितपदो नूनं मनीषा मम ॥ ५ ॥**
**इति श्रीमत्परमहंस परिव्राजकाचार्यस्य श्री गोविन्द भगवत्पूज्यपाद शिष्यस्य**
**श्रीमच्छंकर भगवत: कृती मनीषापञ्चकं संपूर्णम् ॥**

**"யத்ஸௌக்யாம் புதி லேச லேசத இமே**
**சக்ராதயோ நிர்வ்ருதா**
**யச்சித்தே நிதராம் ப்ரசாந்த கலனே**
**லப்த்வா முனிர் நிர்வ்ருத:**
**யஸ்மின் நித்ய ஸுகாம்புதௌ**
**கலிததீ: ப்ரும்மைவ ந ப்ரும்மவித்ய:**
**கஸ்சித்ஸ ஸுரேந்திர வந்தித பதோ**
**நூனம் மனீஷா மம" || 5 ||**

இதி ஸ்ரீமத்பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யஸ்ய ஸ்ரீ கோவிந்த பகவத்
பூஜ்யபாத சிஷ்யஸ்ய ஸ்ரீமத் சங்கர பகவத: க்ருதௌ
மனீஷா பஞ்சகம் ஸம்பூர்ணம்.

**யத்ஸௌக்யாம் புதிலேச லேசத:** = எந்த அறிவாகிற ஆனந்த கடலினுடைய துளியின் துளியால், **இமே சக்ராதய:** = இந்த இந்திரன் முதலியவர்கள், **நிர்வ்ருதா:** = ஆனந்தமுள்ளவர்களாக இருக்கிறார்களோ, **யத்** = எதை, **நிதராம் ப்ரசாந்தகலனே** = மிகவும் அமைதியுள்ள, **சித்தே** = மனதில், **லப்த்வா** = அடைந்து, **முனி** = முனிவர்,

**நிர்வ்ருத:** = ஆனந்தமுள்ளவராக இருக்கிறாரோ, **நித்யஸுகாம்புதௌ** = அழிவற்ற ஆனந்த கடலான, **யஸ்மிந்** = எதில், **கலிததீ:** = லயித்த புத்தியை உடையவன், **ப்ரஹ்மைவ** = ப்ரும்மமாகவே இருக்கிறானோ, **ந ப்ரஹ்மவித்** = ப்ரம்மத்தை அறிந்தவனாக இல்லையோ, **ஸ:** = அப்படிப்பட்ட, **ஸுரேந்த்ரவந்திதபத:** = இந்திரனால் நமஸ்கரிக்கப்பட்ட பதங்களை உடைய புருஷன், **ய: கச்சித்** = யாராக இருந்தாலும், **குரு:** = ஆச்சாரியன், **இதி மனீஷா** = இந்த எண்ணம், **நூநம்** = நிச்சயமாக, **மம** = எனக்கு, **அஸ்தி** = இருக்கிறது.

**தாத்பர்யம்:**

ஆத்ம ஸ்வரூபமானது மேலான ப்ரேமைக்கு பாத்திரபூதமாக இருப்பதால், அதை 'பரமானந்த ஸ்வரூபம் என்று தீர்மானிக்கவேண்டும். இவ்விதம் ப்ரும்மமாக ஆத்மாவை அனுபவிப்பதைக் காட்டிலும் மேலான ஆனந்தம் ஒன்றுமேயில்லை.

இந்த ஆத்மானந்தத்தைத்தான் ப்ரும்மானந்தம் என்று சொல்லுவார்கள். அந்த ப்ரும்மானந்தத்தை தைத்ரீய உபநிஷத்தில் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

அதாவது ஸகல சக்கரவர்த்திகளுக்கும் மேலான சக்கரவர்த்தியாயும். மனோபலத்துடனும். நோயற்ற சரீர பலத்துடனும் அத்புதமான ஸௌந்தரியத் துடனும், ஸகல பூமியும் அவனுடையதாகவும் இருந்து கொண்டிருக்கும் அரசனுடைய ஆனந்தத்தைத்தான் ஆனந்தமென்றும், அன்னியில் மேற்கண்டவை களுக்குள் ஏதாவது ஒரு அம்சம் குறைந்தாலும் அதை ஆனந்தம் என்று சொல்ல முடியாது.

அந்த அரசனுடைய ஆனந்தத்தை,

**“स एको मानुष आनन्द:”**

**"ஸ யேகோ மானுஷ ஆனந்த:"**

என்று வேதமானது வர்ணிக்கிறது. இவ்விதம் கிரமமாக ஆனந்தமானது, அதாவது மனுஷ்யானந்தம், மனுஷ்யகந்தர்வர்களுடைய ஆனந்தம், பித்ரு தேவதைகளுடைய ஆனந்தம், கர்ம தேவர்களுடைய ஆனந்தம், இந்திரனுடைய ஆனந்தம், பிரஹஸ்பதியினுடைய ஆனந்தம், பிரஜாபதியினுடைய ஆனந்தம், ஸகுண ப்ரும்மானந்தம் என்று படிப்படியாக நூறு நூறு மடங்கு அதிகரித்துக்கொண்டே போகிறது என்று ச்ருதியில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

இவ்விதம் மனுஷ்யானந்தம் முதல் ப்ரும்மானந்தம் வரையில் உள்ள 11 விதமான ஆனந்தங்களெல்லாம்,

**“एतस्यैवानन्दस्य अन्यानि भूतानि मात्रामुपजीवन्ति”**

**“ஏதஸ்யை வானந்தஸ்ய அன்யானி பூதானி மாத்ராமுப ஜீவந்தி"**

என்ற ச்ருதியை அனுஸரித்து, ப்ரும்மானந்தத்தினுடைய லேசத்திலும் லேசத்திலும் லவம் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இந்த அறிவாகிற ப்ரும்மானந்தக் கடலினுடைய கொஞ்சத்தின் கொஞ்சத்தால் இந்திரன் முதலான தேவர்களெல்லாம் பரமானந்தம் உள்ளவர்களாக இருந்து வருகிறார்கள். என்பதை பகவத்பாதாள்,

**"यत्सौख्यांबुधिलेशलेशत इमे शकादयो निर्वृताः"**

**"யத்ஸௌக்யாம் புதி லேச லேசத இமே சக்ராதயோ நிர்வ்ருதா: "**

என்ற வாக்கியங்களினால் வெளிப்படுத்தியிருக்கிறார்கள்.

மேலும் ப்ரேமைக்கு ஆஸ்பதமாகச் சொல்லும் தேகம், களத்ரம். புத்திரன், தனம் முதலான பதார்த்தங்களெல்லாம் எந்த பரம ப்ரேமைக்கு ஆஸ்பதமான ஆத்மாவினுடைய ஸம்பந்தத்தால் ப்ரேமாஸ்பதமாக ஆகிறதோ, அதனாலேயே அந்த ஆத்மாவானது பரமானந்த ஸ்வரூபியாகவே எல்லாவற்றிலும் அனுவ்ருத் தித்துக்கொண்டு விளங்கி வருகிறது. தவிர,

**“आत्मा परमानन्दस्वरूपः परमप्रेमास्पदत्वात्"**

**“ஆத்மா பரமானந்த ஸ்வரூப: பரம ப்ரேமாஸ்பதத்வாத்”**

என்ற ப்ரமாணத்தினால் ஸகல பிராணிகளுக்கும் தன் தன் ஆத்மாவினிடத்தில் மனதினாலும் ஸ்மரணம் செய்யமுடியாத நிரதிசயமான ப்ரேமையானது இருந்து வருகிறது.

அத்தகைய ப்ரேமை உண்டாவதற்கு காரணம், ஆத்மா பரமானந்த ஸ்வரூபியாக இருந்து வருகிற படியால் அல்லவா அப்படி பரமானந்த ஸ்வரூபியாக இருக்கிற ஆத்மாவிற்கு ஹானி வரும்பொழுது, ஆத்மாவை ரக்ஷிப்பதற்காக தன்னிடமுள்ள ஸகல ஐச்வரியங்களையும், புத்திரன், மித்திரன் முதலானவர் களையும் தியாகம் செய்கிறான் என்பது லோக ப்ரஸித்தமானது.

ஆத்மாவானது பரமானந்த ஸ்வரூபியாக இல்லாத போனால் அதனிடம் நிரதிசயமான ப்ரேமையை வைத்து, ஆனந்தத்தை தரக்கூடிய மற்ற வஸ்துக்களை தியாகம் செய்வானா? அவைகளை தியாகம் செய்ததிலிருந்தே ஆத்மாவானது பரமானந்தஸ்வரூபம் என்பது ப்ரத்யக்ஷமாக தெரிகிறது.

தவிரவும், ஆத்மாவிடம் வைத்திருக்கப்பட்ட மேலான ப்ரேமையை, தன்னைக்காட்டிலும் வேறான வஸ்துக்களிடம் ஒரு காலத்திலும் வைக்கவே மாட்டான் என்பது வெளியாகிறது.

**"यं लब्ध्वा च अपरं लाभं मन्यते नाधिकम् ततः"**

**“आत्मलाभान्न परं विद्यते''**

**"யம் லப்த்வா ச அபரம் லாபம் மன்யதே நாதிகம் தத:”**
**“ஆத்மலாபாந் நபரம் வித்யதே”**

என்ற ச்ருதி ஸ்மிருதியும் ஆத்ம லாபத்தைக் காட்டிலும் மேலான லாபம் ஒன்றுமேயில்லை என்று சொல்லுகிறபடியால் ஆத்ம ஸ்வரூபம் ஒன்றுதான் ஸகல பிராணிகளுக்கும் பரம ப்ரேமைக்கு ஆஸ்பதமான வஸ்து, அந்த காரணத்தால் ஆத்மா ஒன்றுதான் ஆனந்த ஸ்வரூபம் என்று ஸித்திக்கிறது.

இவ்விதம் அறிவாகிற ஆனந்தக்கடலான ப்ரத்யகாத்மாவை ஸனக ஸனந்தன ஸனாதன ஸனத் குமாரர்களாகிய ப்ரும்ம நிஷ்டர்களெல்லாம் மிகவும் அமைதி யுள்ள தங்களுடைய மனதில் அத்வைத ஞானத்தோடு கூட த்யானம் செய்துகொண்டு அதாவது அனுபவித்துக்கொண்டு எல்லையற்ற ஆனந்தக் கடலில் முழுகியவர்களாக இருந்து வருகிறார்கள்.

**यस्त्वात्मरतिरेव स्याद् आत्मतृप्तश्च मानवः ।**
**आत्मन्येव च सन्तुष्टः तस्य कार्यं न विद्यते ।।**

**"யஸ்த்வாத்மரதிரேவ ஸ்யாத்**
**ஆத்ம த்ருப்தஸ்ச மானவ: ।**
**ஆத்மன்யேவ ச ஸந்துஷ்ட:**
**தஸ்ய கார்யம் ந வித்யதே"**

என்ற கீதாசாஸ்திரத்தை அனுஸரித்து, மகா தபஸ்விகளான ப்ரும்ம நிஷ்டர்க ளெல்லாம் ஸதா காலமும் தங்களுடைய மனதை வேறு ஒரு விஷயத்திலும் செலுத்தாமல் கேவலம் அந்தர்முகர்களாக இருந்து கொண்டு அத்விதீயமான ஆத்மஸ்வரூபத்தை பரப்ரும்மத்திற்கு வேறு படுத்தாமல் அகண்டாகார வ்ருத்தி ஞானத்தோடு, நிரதிசய ஆனந்தக்கடலான ஆத்ம ஸ்வ ரூபத்தில் லயித்த புத்தியை உடையவர்களாக இருந்து கொண்டு வருகிறார்கள்.

இவ்வித மஹிமையுள்ள மகா புண்யமூர்த்திகள் பரப்ரும்ம ஸ்வரூபமாகவே இருந்துவருகிறார்களே தவிர பரப்ரும்மத்தை அறிந்தவர்களாக இல்லை.

அதாவது அறிகிறவன், அறியப்படுகிறவன், அறியப்படுகின்ற வஸ்து என்ற பேத ஞானம் இல்லாமல் பரப்ரும்மமாகவே இருந்துகொண்டு, வருகிறார்கள்.

இப்பேர்ப்பட்ட ஞான மஹிமையோடு கூடியுள்ள மஹான்கள் கிடைப்பதே மிகவும் அரிது. இதைத்தான் பகவானும் கீதையில்,

**आश्चर्यवत्पश्यति कश्चिदेनम्**
**आश्चर्यवद्वदति तथैव चान्यः ।**
**आश्चर्यवच्चैनमन्यः शृणोति**
**श्रुत्वाप्येनं वेदन चैव कश्चित् ॥**

**“ஆஸ்ச்சர்யவத்பச்யதி கஸ்ச்சி தேநம்**
**ஆஸ்ச்சர்ய வத்வததி ததைவ சான்ய:**
**ஆஸ்ச்சர்யவச்சை நமன்ய: ச்ருணோதி**
**ச்ருத்வாப்யேனம் வேதந ச்சைவ கஸ்ச்சித்"**

அவ்விதமே.

**मनुष्याणां सहस्रेषु कश्चिद्यतति सिद्धये ।**
**यततामपि सिद्धानां कश्चिन्मां वेत्ति तत्त्वतः ॥**

**மனுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு**
**கஸ்ச்சித்யததி ஸித்தயே**
**யததாமபி ஸித்தானாம் கஸ்ச்சின்மாம்**
**வேத்தி தத்வத:**

முதலான ச்லோகங்களினால் உபதேசிக்கின்றார். இதனால் நிர்விகாரமான ஆத்மதத்துவ ஞானம் அநேக கோடி மனிதர்களுக்குள் யாராவது யாராவது ஒரு புண்யவானுக்குத்தான் ஏற்படும். அன்னியில் ஆத்ம தத்வ ஞானம் எல்லா பிராணிகளுக்கும் சுலபமாக ஏற்படக் கூடியதல்ல. மேலும் ஆத்மதத்துவமானது “நான்" என்ற சப்தத்திலோ, புத்தியிலோ விஷயமாகாது.

ஆகையால் பிராணிகளுக்கு "நான்" என்று ஏற்படும் ஆத்மஞான தரிசனம் நிர்விசேஷ நிர்விகார ஆத்மதத்துவ தரிசனமாகாது.

அநேக ஜன்மாக்களில் செய்த புண்ய வசத்தால் ஈச்வர பிரஸாதத்தை அடைந்து. இஹ ஜன்மாவில் ஏற்பட்டிருக்கும் சரீரத்தைத் தவிர புதிதாக சரீரம் ஏற்படப்போகிறதில்லை என்ற த்ருட்மான நிலையிலிருக்கும், அநேக ஜன்ம ஸம்ஸித்தமான யாரோ ஒரு மனிதன் தான் நித்ய, சுத்த, புத்த, முக்த ஸ்வபாவமான ஆத்ம ஸ்வரூபத்தை சாஸ்திர, ஆசாரிய உபதேச மூலமாக தெரிந்துகொள்வான்.

**श्रद्धाभक्तिपुरःसरेण विहितेनैवेश्वरं कर्मणा**
**संतोष्यार्जिततत्प्रसादमहिमा जन्मान्तरेष्वेव यः ।**
**नित्यानित्यविवेकतीव्र विरतिन्यासादिभिः साधनैः**
**युक्तः सत्पुरुषः सतामभिमतः मुख्याधिकारी श्रुतौ ॥**

**"ச்ரத்தாபக்தி புரஸ்ஸரேண விஹிதே**
**நைவேச்ரம் கர்மணா**
**ஸந்தோஷ்யார்ஜிதத‌த் ப்ரஸாத மஹிமா**
**ஜன்மாந்தரேஷ்வேவ ய:**
**நித்யா நித்ய விவேக தீவ்ரவிரதி**
**நயாலொதிபிஸ் ஸாதநை:**
**யுக்த: வத்புருஷ: ஸதாமபிமத: முக்யாதி**
**காரீ ச்ருதௌ"**

என்ற சங்கரபகவத்பூஜ்ய பாதாளுடைய ஸுக்தியை அனுஸரித்து, ஜன்மாந்தரத்தில் வேத விகிதமான கர்மாக்களை கர்த்ருத்வ கர்த்ருத்வ அபிமானமில்லாமலும் பலாபி மானமில்லாமலும் செய்து, அந்த மஹிமையினால் அந்த கர்மாவானது பகவத் ஆராதன ரூபமாக ஆகி, பூர்வ ஜன்மாக்களிலேயே பகவானுடைய பிரஸாதத்தை அடைந்திருக்கிறான் என்பதற்கு அறிகுறியாக இந்த ஜன்மாவில், நித்ய அநித்ய வஸ்து விவேகம், வைராக்கியம், ஸமாதிஷட்க ஸம்பத்தி, முடிவில் முமுக்ஷத்வம் என்ற ஸாதன சதுஷ்டய ஸம்பன்னனாக விளங்கி வரும் உத்தம அதிகாரிதான் வேதாந்த விசாரம் செய்வதில் முக்கிய அதிகாரியாக ஆகிறான் என்று தெரிகின்ற படியால் யார்தான் ஆத்மதத்துவ தரிசனம் மிகவும் துர்லபம் என்பதை ஆக்ஷேபிக்க முடியும்?

மேலும் அறிகிற புருஷன் கோடி மனிதர்களில் ஒருவனாக இருப்பதினால் ஆத்மதத்துவ ஞானம் துர் லபம் என்றும், தவிர ஆத்மதத்துவம் நிர்விகாரமான தினால் அதை உபதேசம் செய்கிற ஆசாரிய புருஷனும் மிகவும் துர்லபந்தான் என்றும் தெரிகிறது.

இவ்விதம் இருந்துகொண்டிருக்கும் பொழுது துர் லபமான மனுஷ்ய ஜன்மாவையடைந்த பிராணிகளெல்லாம் ஒரு ஸத்குருவை அண்டி சாஷ்டாங்கமாக சரணமடைந்து,

**तद्विद्धि प्रणिपातेन परिप्रश्नेन सेवया |**
**उपदेक्ष्यन्ति ते ज्ञानं ज्ञानिनस्तत्त्व दर्शिनः ।।**

**தத்வித்தி ப்ரணி பாதேந**
**பரிப்ரஸ்நேந ஸேவயா**
**உபதேக்ஷ்யந்தி தே ஞானம்**
**ஞானினஸ்தத்வ தர்சின:**

என்ற கீதாசாஸ்திர ரீதியாக குருவை த்ருப்தி செய்து மோக்ஷ பதவியை அடைவதற்கு யத்னம் செய்ய வேண்டும்.

இவ்விதம் குருவினுடைய உபதேச மஹிமையினால் ஜீவன் முக்தி நிலையிலிருக்கிற புண்யவான்களுடைய திருபாத கமலங்களை இந்திரன் முதலான தேவர்கள் ஸதாகாலமும் சரணமடைந்து வருகிறார்கள்.

அல்லது,

**"सुरेन्द्रवन्दितपद:"**

**"ஸுரேந்த்ர வந்தித பத:"**

என்ற பதத்திற்கு,

**सुरेन्द्रवन्दितपद: सुरेन्दैब्रह्मादिभिर्वन्दितमहमित्या परोक्षणानुभूतं पदंस्थानं ब्रह्मरूपं यस्येति स तथोक्त:**

**"ஸுரேந்த்ரவந்தித பத: ஸுரேந்ரைப்ரும்**
**மாதிபிர் வந்தித மஹமித்யா**
**பரோக்ஷேணானுபூதம்பதம் ஸ்தானம் ப்ரம்ம**
**ரூபம் யஸ்யே தி ஸ ததோக்த:"**

என்றும் அர்த்தம் கூறலாம்.

இவ்வாறு எல்லா ஆனந்தத்திற்கும் மேலான ஆனந்தமாக இருந்துவருகிற கூடஸ்த சைதன்யந்தான் "**अहं**" "அஹம்" என்ற சப்தத்தால் சொல்லப்படும் ஆத்ம வஸ்துவாகும். அந்த ஆத்மாவை பரப்ரும்மத்திற்கு வேறுபட்டதல்ல என்று மனனம் செய்து "ब्रह्मैवाहं" "ப்ரும்மைவாஹம் என்ற த்ருடமான ப்ரக்ஞை எவனுக்கு இருந்தாலும், அந்த அறிவினுடைய மஹிமையினால், தான் பிராமணன். சண்டாளன் என்ற வர்ணங்களில் உள்ள அபிமானமோ, கிரஹஸ்தன், பிரும்மசாரி என்ற ஆசிரமங்களில் உள்ள அபிமானமோ, ரக்தம், மாமிசம், எலும்பு, தோல் முதலியவைகளால் செய்யப்பட்ட தேகத்தில் "**अहं**" "அஹம்" என்ற தாதாம்ய அத்யாஸமோ "**मम**" "மம" என்ற ஸம்ஸர்க்க அத்யாஸமோ, இல்லாமல் இருக்கும் காரணத்தினால், அந்த ஞானியை அகண்ட ஸச்சிதானந்த ரூபமான பரப்ரும்மமாகவே ச்ருதியானது போதிக்கின்றபடியால் இங்கு என் முன் வியவஹார தசையில் சண்டாள ரூபத்தில் இருந்து வரும் புருஷன் எனக்கு ஆத்ம தத்துவத்தை உபதேசம் செய்கிற ஆசாரியனாக இருந்து வருகிறான் என்ற ஒரு எண்ணம் என் விஷயத்தில் மிகவும் உறுதியாக இருந்து வருகிறது என்று சங்கரபகவத் பூஜ்ய பாதாள் சண்டாளனுடைய பாதத்தில் சாஷ்டாங்கமாக சரணமடைந்து தன்னுடைய ஸ்வானுபூதியை பிரகடனம் செய்தார்கள்.

உண்மையில், பகவத்பாதாளுடைய மஹிமையை எடுத்து வர்ணிப்பதற்கு ஸகல ஐச்வரியங்கள் பொருந்திய ஸாக்ஷாத் பகவதியினாலேயே முடியாது,

அப்பேர்ப்பட்ட அபரிமிதமான வைபவத்தோடு விளங்கி வருகின்ற பகவத்பூஜ்ய பாதாளுடைய சிரஸானது ப்ரக்ருதத்தில் சண்டாளனுடைய பாதத்தில் நமஸ்கரிக்கப்பட்டது.

**உத்திர பீடிகை**

இவ்விதம் பரமாச்சார்யாள் ஐந்து ஸ்லோகங்களைச் சொல்லி ஸாஷ்டாங்கமாக சண்டாளனுடைய பாதத்தில் நமஸ்கரித்து தன்னுடைய ஸ்வானு பூதியை ப்ரகடனம் செய்தார்கள்,

ஆனால் என்ன ஆச்சரியம்! சண்டாளனுடைய ஸ்தானத்தில் சண்டாளனைக் காணவில்லை. சண்டாளனுடைய தலையில் கள் குடமாக இருந்தது கங்கையாக ப்ரவாஹித்துக் கொண்டிருந்தது. கையிலிருந்த தண்டமானது ஞானமயமான சூலமாகவும், மற்றொரு கையிலிருந்த நெருப்பானது, ஸர்வத்தையும் ப்ரளயகாலத்தில் அழித்து, ஸாக்ஷியாகவுள்ள காலாக்னியாகவும் பாஸித்து வந்தது.

அவனுடைய இரு குமாரர்கள் கஜானனனும் ஷடாணனனுமாகவும், பார்யையானவள் ஜகன் மாதாவான காசி விசாலாக்ஷியாகவும், நான்கு சொறிபிடித்த நாய்கள், நான்கு வேதங்களுடைய ஸொரூபத்தை எடுத்துக்கொண்டு ப்ரும்ம கோஷம் செய்துகொண்டிருந்தது.

சண்டாளனுடைய ஸ்தானத்தில் ஸாக்ஷாத் ஸர்வேச்வரனான காசி விச்வநாத ஸ்வாமியானவர் மின்னல் மாதிரி ஜ்வலித்துக்கொண்டிருந்தார்.

அத்யத்புதமான இந்த காட்சியைக் கண்டவுடன் பகவத்பாதாள் ஆனந்த கடலில் முழுகியவராக யிருந்து கொண்டு, ஆனந்த பாஷ்பத்தை பெருக விட்டுக் கொண்டு ஸர்வேச்வரனைப் பார்த்து பின்வருமாறு ஸ்துதித்தார்கள்.

**दासस्तेऽहं देहदृष्ट्याऽस्मि शंभो**
**जातस्तेऽशो जीवदृष्ट्या त्रिदृष्टे ।**
**सर्वस्याऽऽत्मन्नात्मदृष्ट्या त्वमेवे-**
**त्येवं मे धीर्निश्चिता सर्वशास्त्रैः ॥**

**தாஸஸ்தேஹம் தேஹ த்ருஷ்ட்யாஸ்மி சம்போ**
**ஜாதஸ்தேம்சோ ஜீவத்ருஷ்ட்யா தரித்ருஷ்டே**
**ஸர்வஸ்யாத்மந்நாத்மத்ருஷ்ட்யா த்வமேவே**
**த்யேவம் மே தீர்நிச்சிதா ஸர்வசாஸ்த்ரை:**

ஹே ப்ரபோ! நான் பாஞ்ச பௌதிகமானதும், நச்வரமானதுமான தேகத்தை ப்ராதான்யமாக வைத்துக்கொண்டு பார்க்கும்பொழுது. தங்களுடைய திருபாத கமலங்களுக்கு ஸேவகனாக இருந்து வருகிறேன். ஜீவன், ஈச்வரன் என்று பேத புத்தியினால் நோக்கும் பொழுது நான் அம்சனாகயிருந்து வருகிறேன். ஆனால் ஹே

சம்போ! பரிசுத்தமானதும், ஸர்வ வ்யாபியாகவுமுள்ள ஆத்மாவை பார்க்கும் பொழுது நான் தங்களது ஸ்வரூபமாகவே இருக்கிறேன், என்று எல்லா சாஸ்திரங்களினாலும் என் புத்தியானது திடமான தன்மையை அடைந்திருக்கிறது அதில் சிறிதும் எனக்குஸந்தேகமில்லை.

மேலும் ஹே சம்போ! தத்வ த்ருஷ்டியாக ஒருவனை தொடுவது, ஒருவனைத் தொடக்கூடாது. என்ற தோஷம் இல்லாதபோனாலும், ஆகம சாஸ்த்திரத்தை அனுஸரித்து வ்யவஹாரதசையில் அதை அனுஷ்டித்தே தீரவேண்டுமென்று லோகத்திற்கு போதிப்பதற்காகவேதான் நான் தங்களை “தூர விலகிப் போ" என்று என்று கூறினேனே தவிர "ஏக மேவாத்விதீயம் ப்ரும்ம" என்ற தெளிவான அறிவு எனக்கு த்ருடமாக இல்லாத காரணத்தினால் அல்ல என்று பலவாறாக விச்வநாதரை ஆசார்யாள் ஸ்துதித்தார்கள்.

பாஷ்யகாராளுடைய ஸுக்தியைக் கேட்டு விச்வநாத ஸ்வாமியானவர் ஆனந்தமடைந்து, பகவத்பாதாளுடைய சிரஸில் "ஜீவப்ரும்ப ஐக்யத்தை போதிக்கும் சின்முத்ரையையை" வைத்து அனுக்ரஹம் செய்து ஹேசங்கரா! அதிகாரிகளாக யிருப்பவர்கள், காமோத்பவத்தினால் விவேகத்தை யிழந்து. அதர்மத்தை தர்மமாக நினைத்துக்கொண்டு, காலக்கிரமத்தில் தர்மத்தை அழித்து அதர்மத்தை வளர்த்துக் கொண்டே வந்தார்கள். அந்த சமயத்தில் ஜகத்ரக்ஷகனான ஸ்ரீமன்நாராயணன், இந்த புண்ய பூமியில் புத்தராக அவதாரம் செய்து, அனதிகாரிகளாக இருப்பவர்களை மறுபடியும் வைதிக மதத்தில் திருப்பிவைப்பதைக் காட்டிலும், அந்த அனதிகாரிகளுக்கு ஸாமான்யலோக தர்மத்தை ப்ராதான்யமாக கூறி, லோகத்தில் பௌத்த மதத்தை முக்யமாக பரவச் செய்தார். இதனால் காலக்ரமேனா அதிகாரிகளாக யிருப்பவர்களும் கூட வைதிக மதத்தில் உள்ள த்ருடமான ச்ரத்தையை யிழந்து பௌத்த மதத்தை தழுவ ஆரம்பித்தார்கள்.

அதனால் எங்கு பார்த்தாலும் ஜனங்கள். நிரீச்வர மதவாதிகளாக இருந்து கொண்டும், வர்ணாச்ரம தர்மத்தை இழந்தவர்களாகவும், வேத பஹிஷ்டர்களாகவும் ஆகிவிட்டார்கள் என்பதை எல்லாம் நீ நன்றாக அறிவாய்.

வர்ணாச்ரம பேதமானது வைதிக தர்மத்தில் ப்ரதிஷ்டிதமாகயிருப்பதால் அந்த வைதிக தர்மத்தை லோகத்தில் மறுபடியும் ஸ்தாபனம் செய்ய, உன்னைத் தவிர யாராலும் முடியாது என்பதை சொல்லவும் வேண்டுமா . மேலும்

**ब्रह्म सत्यं जगन्मिथ्या जीवो ब्रह्मैव मापरः ।**
**अनेन वेद्यं सच्छास्त्रमिति वेदान्तडिण्डिमः ॥**

**“ப்ரும்ம ஸத்யம் ஜகன்மித்யா ஜீவோ ப்ரும்மைவ நாபர: ।**
**அனேன வேத்யம் ஸச்சாஸ்த்ரமிதி வேதாந்த டிண்டிம: ॥”**

அதாவது ப்ரும்மம் ஒன்றுதான் ஸத்யமான வஸ்து. ஜீவாத்மா என்று சொல்லப்படும் வஸ்துவும். ப்ரும்மத்தைக் காட்டிலும் வேறல்ல, இதுதான் ஸகலவிதமான சாஸ்த்திரங்களினாலேயும் போதிக்கப்படுகின்ற உண்மையான தத்வம். இந்த தத்வத்தைத் தான் "ப்ரும்ம ஸுத்திரம்" போதிக்கின்றது. அந்த ப்ரும்ம

ஸூத்திரத்திற்கு உண்மையான பொருள் என்னவென்று தெரியாமல் ஸகல ப்ராணிகளும் கஷ்டப் படுகிறார்கள்.

ஆகையினால் கருணாமூர்த்தியான ஹே சங்கரா! நீ என் ஸ்வரூபமாகவே இருப்பதால், வேதத்தின் ஹிருதயத்தை லோகத்திற்கு உன் முகார விந்தத்தி லிருந்து ஒழிகி வருகிற பாஷ்யரூபமாக செய்து அருள் புரிய வேண்டும்.

தவிர ஞானமார்க்கத்தினால்த்தான் ஜீவப்ரும்ம ஐக்ய ஸாக்ஷாத்காரத்தை அடைய முடியும் என்று வேதத்தினுடைய ஹிருதயம் கூறுகின்றதால், அத்தகைய மஹா மஹிமையுள்ள ஞானக் கலையை லோகத்தில் நீ தான் ஸ்தாபனம் செய்யவேண்டும்.

அந்த ஞானகலையை லோகத்தில் ஸ்தாபனம் செய்வதற்குத்தான் உன்னுடைய அவதார ரகஸ்யமே. இந்த தேவரகஸ்யத்தை யெல்லாம் எடுத்து நான் உனக்கு கூறவும் வேண்டுமா!

வேத ப்ரமாணம் யுக்தி, ஞாயம், என்ற மூன்று ஸிம்ஹங்களை, நிஷ்பக்ஷபாதம் என்ற அங்குசத்தினால் உன் வசப்படுத்திக்கொண்டு, யானைகளின் மஸ்தகங்கள் மாதிரியுள்ள வேத பஹிஷ்டர்களான 72-க்கு மேலாக உள்ள துர்மதஸ்தர்களை ஏகனாக இருந்துகொண்டு நீ வாதத்தில் த்வம்ஸம் செய்து. அத்வைத சாம்ராஜ்ய பீடத்தில் நீ அமர்ந்து, உன்னுடைய பாஷ்யம் என்ற ப்ரவசன ஸூக்தியை "ப்ரும்ம ஸதஸில்" பூஜிப்பதை நான் காணவேண்டும் என்று விச்வநாத ஸ்வாமியானவர் பலவாறாக பகவத்பாதாளைப் புகழ்ந்து அந்தர் த்யானம் அடைந்தார்.

அந்த சமயத்தில் தேவதுந்துபி முழங்கிப் புஷ்ப மழை பொழிந்தது.

இப்படி பகவத்பாதாளுக்கும் காசி விச்வநாத ஸ்வாமிக்கும் நடந்த சம்வாதத்தை ப்ரத்யக்ஷமாக அனுபவித்துக் கொண்டிருந்த சிஷ்யர்கள் எல்லாம் ஆனந்த ஸமுத்திரத்தில் முழுகியிருந்தார்கள்.

இவ்விதம் ஸர்வேச்வரனிடமிருந்து பகவத் பாதாள் அனுக்கிரஹம் பெற்றுக்கொண்டு, தமது சிஷ்ய கோடிகளுடன் விச்வநாத ஸ்வாமியின் ஸன்னிதானத்தை அடைந்து, த்யானத்திலிருக்கையில், அந்த விச்வலிங்க மூர்த்தியிலிருந்து "**சிவம் ஸத்யம், ஸத்யம் அத்வைதம்**" என்னும் வாக்யங்கள் அனைவருங்கேட்க வெளிப்பட்டன.

இத்தகைய மஹிமையுள்ள பகவத் பாதாளுடைய சரித்திரமாகிய அமிருதமானது, கலியில் ப்ராயச் சித்தமே இல்லாத ஸகலவிதமான பாபங்களை யெல்லாம் எரித்து, மோக்ஷ சாம்ராஜ்யத்தை அளிக்க சாமர்த்திய முள்ளதாக இருக்கிறது.

பகவத்பாதாளுடைய முகாரவிந்தத்திலிருந்து ஒழுகின மனீஷாபஞ்சகம் என்ற பெயரால் அலங்கரிக்கப்பட்ட, திவ்யாம்ருதத்தை திவ்யாம்ருதத்தை. எவனொருவன் தினந்தோரும் ஆசார்ய பக்தியோடுகூட பாராயணம் செய்து கொண்டு, அதில்

அந்தரங்கமாகவுள்ள அர்த்தத்தை அனுஸந்தானம் செய்துவருகிறானோ. அவன் காலக்கிரமத்தில் "**अहं प्रशास्मि**" "**அஹம் ப்ரஹ்மாஸ்மி**" என்ற திவ்ய நிலையை அனுபவிப்பான் என்பதில் சிறுதும் ஸந்தேகம் இல்லை இது சத்யம்.

**कथाभिरभिरामाभिरभिरामौ नृपात्मजौ ।**
**रमयामास धर्मात्मा कौशिको मुनिपुंगवः ॥**

**एतारशस्थिति अवलम्बमानानां मम**
**अभिरामसद्गुरुवर्याणां पादकमलयोः**
**एषामनीषापञ्चकद्रविटव्याख्या**
**सविनय समर्पिता भवति ।**
**मम गुरुवर्याः मम**
**बालालापेन सन्तुष्टाः**
**भवन्तीति न खलु**
**हृदि सन्देहकणिका।**

**सहिकारुण्यरत्नाकरः**

